ஸ்ரீ:

# திருவிண்ணகர்த் தலமான்மியம்

(ஒப்பிலியப்பன்ஸந்நிதி–ஸ்தலபுராணம்)

மொழிபெயர்த்தவர்

"வித்யாவிசாரத"

வ. ந. ஸ்ரீராமதேசிகாசாரியர் ஸ்வாமி

சிரோமணி & வித்வான்

போர்டு ஹைஸ்கூல்

குத்தாலம்



பதிப்பாளர்

N. T. கண்ணன் பட்டாசாரியர்

"ஸ்ரீராம சரணம்"

ஒப்பிலியப்பன்ஸந்நிதி

[illegible]நாகேசுவரம் போஸ்டு

1950 [ 8 அணு

    

ஸ்ரீ:

# திருவிண்ணகர்த் தல மான்மியம்

(ஒப்பிலியப்பன் ஸந்நிதி–ஸ்தல புராணம்)





மொழிபெயர்த்தவர்:

"வித்யாவிசாரத"

வ. ந. ஸ்ரீராமதேசிகாசாரியர் ஸ்வாமி

சிரோமணி & வித்வான்

போர்டு ஹை ஸ்கூல்

குத்தாலம்



பதிப்பாளர்:

N. T. கண்ணன் பட்டாசாரியர்

"ஸ்ரீராம சரணம்"

ஒப்பிலியப்பன் ஸந்நிதி

திருநாகேசுவரம் போஸ்டு

ஸ்ரீ மஹாபாரதம் பிரஸ், கும்பகோணம்

1950

ஸ்ரீ:

ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸாய நம:

# முன்னுரை

ஏறக்குறைய 20-ஆண்டுகட்குமுன், 9-அத்யாயம் கொண்ட இத்தலபுராணம் ஒப்பிலியப்பன் ஸந்நிதி வித்வான் ஸ்ரீ-உ-வே **வங்கீபுரம் நவநீதம் ஸ்ரீராமதேசிகாசாரியர்** ஸ்வாமியால் தமிழில் மொழிபெயர்க்கப்பெற்று எங்கள் பெரியோர்களால் பதிப்பிக்கப்பட்டது. இதன் பிரதிகளெல்லாம் செலவாகிவிட்டன. தென்னாட்டில் தலைசிறந்து விளங்கும் இந்தத் திவ்யதேசத்தின் பெருமையை விளக்கும் இந்நூலைப் படித்து இம்மை மறுமைப் பயன்களைப் பெற விரும்புபவர்களின் நலத்திற்காக மறுபடியும் இப்புராணம் இப்பொழுது மறுபதிப்பில் வெளியாகின்றது. ஆஸ்திகர்கள் இந்நூலை நன்கு பயன்படுத்திச் சகல மங்களங்களையும் பெறுக. அனைவர்க்கும் எளிதில் விளங்குமாறு இப்புராணத்தை இனிய தமிழ்நடையில் எழுதிக்கொடுத்தும், இத்தலத்தெம்பெருமான் விஷயமாய் ஆழ்வார்கள் மங்களாசாஸனம்செய்தருளிய திவ்யப்பிரபந்தப் பாசுரங்களுக்குப் பொழிப்புரை எழுதிக் கொடுத்தும் பேருதவி புரிந்த ஸ்ரீ-உ-வே வ. ந. ஸ்ரீராமதேசிகாசாரியர் ஸ்வாமிக்கு அடியேனுடைய நன்றி என்றும் உரித்தாகுக.



“ஸ்ரீராம சரணம்”
ஒப்பிலியப்பன் ஸந்நிதி
1—4—'50

N. T. கண்ணன் பட்டாசார்யன்



பூமிநாச்சியார் — ஸ்ரீ ஒப்பிலியப்பன்

ஸ்ரீ:

# ஒப்பிலியப்பன்ஸந்நிதி — ஸ்தல விளக்கம்

இந்த க்ஷேத்ரம் கும்பகோணத்திற்கு அடுத்த திருநாகேசுவரம் S. I. R. ஸ்டேஷனிலிருந்து தெற்கில் 1-மைல் தூரத்திலும், கும்பகோணம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கில் 3-மைல் தூரத்திலும் உள்ளது. இத்தலம் 'ஆகாச நகரம்', 'திருவிண்ணகர்', 'மார்க்கண்டேய க்ஷேத்ரம்', 'ஒப்பிலியப்பன் ஸந்நிதி', 'உப்பிலியப்பன் ஸந்நிதி' என்றெல்லாம் வழங்கும். எம்பெருமானுக்குத் 'திருவிண்ணகரப்பன்'; 'தன்னொப்பாரில்லப்பன்' 'ஒப்பிலியப்பன்','உப்பிலியப்பன்','ஸ்ரீநிவாஸன்','வெங்கடாசலபதி' என்றெல்லாம் திருநாமங்கள் வழங்குகின்றன. நாச்சியாருக்குப் பூமிதேவி யென்று திருநாமம். பெருமாள் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்திலும், நாச்சியார் வடக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலத்திலும், மார்க்கண்டேயர் கன்னிகாதானம் செய்த கோலத்திலும் காட்சி தருகின்றனர். இவ்வெம்பெருமானைப் பொய்கையாழ்வார், பேயாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகிய நால்வர் மங்களாசாஸனம் செய்தருளினர். நம்மாழ்வாருக்கு இத்தலத்தெம்பெருமான் ஐந்து வடிவங்கொண்டு காட்சியளித்தபடியால் நம்மாழ்வார் பொன்னப்பன், மணியப்பன், முத்தப்பன், என்னப்பன், திருவிண்ணகரப்பன் என்ற ஐவரையும் பாடியருளினர். விமானத்திற்குச் 'சுத்தாநந்தம்' என்று பெயர். கோயிலுக்குள் அஹோராத்ரபுஷ்கரணியும், வெளியில் நான்கு தீர்த்தங்களும் உள்ளன. கோவிலுக்குத் தெற்கில் மூன்று புண்ணிய நதிகள் ஓடுகின்றன. பெருமாள் திருநக்ஷத்ரம் திருவோணம். புரட்டாசி, பங்குனி மாதங்களில் 9-நாள் உத்ஸவம் நடந்து திருவோணத்தில் திருத்தேரும், ஐப்பசித் திருவோணம் தொடங்கி 10-நாட்களுக்குத் திருக்கலியாண உத்ஸவமும் விசேஷமாய் நடைபெறுகின்றன. கோவில் முழுதும் மின்சார விளக்குகள் போடப்பட்டுள்ளன. கோவிலுக்குத் தென்புறத்தில் ஒரு பெரிய திருநந்தனவனம் செழிப்புடன் திகழ்கின்றது. இந்த ஸந்நிதி சென்னை இந்துமதபரிபாலன போர்டின் ஆதிக்கத்துட்பட்டதாகும். ஸந்நிதி நிர்வாகம் முழுதும் வடகலை ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தது. ஸந்நிதியின் வைதிக கர்மங்கள் அனைத்தும் ஸ்ரீவைகாநஸ முறையைத் தழுவி நடத்தப்படுவன.

ஸ்ரீ:

## ஸந்நிதியில் நடக்கும் உத்ஸவங்களின் விளக்கம்

| | |
|---|---|
| வைகாசி-மீ | திருவோணம்—வஸந்தோத்ஸவ சாத்து முறை (முந்திய விசாகம் தொடங்கி 7-நாள் உத்ஸவம்) |
| ஆவணி-மீ | திருவோணம்— பவித்ரோத்ஸவ சாத்து முறை (முந்திய கேட்டை தொடங்கி 5-நாள் உத்ஸவம்) |
| புரட்டாசி-மீ | திருவோணம்—ப்ரஹ்மோத்ஸவ சாத்து முறை, திருத்தேர். (முந்திய சித்திரை தொடங்கி 9-நாள் உத்ஸவம்) |
| ஐப்பசி-மீ | திருவோணம்—திருக்கலியாண உத்ஸவம்-தொடக்கம் (பின் 10-நாள் உத்ஸவம்) |
| மார்கழி-மீ | — திருவத்யயநோத்ஸவம் 22-நாள் |
| தை-மீ | திருவோணம்—தெப்ப வுற்சவம், சாத்து முறை (முந்திய கேட்டை தொடங்கி 5-நாள் உத்ஸவம்) |
| பங்குனி-மீ | திருவோணம்—ப்ரஹ்மோத்ஸவ சாத்து முறை (அவதாரோத்ஸவம்) திருத்தேர். (முந்திய சித்திரை தொடங்கி 9 நாள் உத்ஸவம்.) |

## பிரார்த்தனை செலுத்தும் தொகை விளக்கம்

(தேவஸ்தான நோட்டீஸ் போர்டில் உள்ளபடி)

| | | | |
|---|---|---|---|
| 1. முடி | ரூ. 2—0—0 | 6. நித்யாராதனம் | ரூ. 11-0-0 |
| 2. காது குத்த | 1—6—0 | 7. மூலவர் திருமஞ்சன அநுமதிக் கட்டணம் | 5-0-0 |
| 3. விவாஹம், உபநயனம், ஸீமந்தம் ஒவ்வொன்றுக்கும் | 14—0—0 | 8. உத்ஸவர் திருமஞ்சன அநுமதிக் கட்டணம் | 1-0-0 |
| 4. வளைகாப்பு | 5—0—0 | | |
| 5. ஆயுஷ்ய ஹோமம் | 2—0—0 | | |

ஸ்ரீ:

ஸ்ரீ பூமிநாச்சியார் திருவிண்ணகரப்பன் திருவடிகளே சரணம்

# திருவிண்ணகர்த் தல மான்மியம்

[ப்ரஹ்மாண்ட புராணத்திலுள்ளது]

---

## நாரதர் பிரமனை வேண்டல்

பிரமலோகத்தில் எல்லாத் தேவர்களும் தொழ வீற்றிருந்த பிரமதேவனை அவனுக்குப் புத்திரரான நாரத முனிவர் ஒருகால் சென்று வணங்கிப் பின் வருமாறு வேண்டிக்கொண்டார்:— 'ஸ்வாமி! முன் ஒருகால் தாங்கள் எனக்கு ஒவ்வொரு தலத்தின் மான்மியத்தை யும் வரலாறுகளையும் விளக்கிக் கூறினீர்கள். கும்பகோண மென்னும் தலத்தின் வரலாற்றினைக் கூறும்போது மார்க்கண்டேய க்ஷேத்திரத்தைப்பற்றிச் சுருக்கமாகக் கூற நேர்ந்தது. அதைக் கேட்ட அடியேன் அந்தத் தலத்தின் மான்மியத்தையும் வரலாற்றினையும் முழுதும் விளக்கமாகத் தங்கள் வாயினால் கேட்டு மகிழ மிக்க அவாவுடையேன். இப்பொழுது அத்தலத்தின் அருமை பெருமைகளை விளக்கிக்கூறி அடியேன்வாயிலாக உலகின ரும் கேட்டு வாழுமாறு அருள்செய்யவேண்டும்" என்று.

## பிரமன் தல மான்மியம் கூறல்

இதைச் செவியுற்ற பிரமதேவன் திருவிண் ணகரத்தினுடையவும், திருவிண்ணகரப்பனுடையவும் பெருமையைத் தன்வாயினாற் கூற ஒரு வாய்ப்பு வாய்த்ததே என மகிழ்ந்து நாரதனை வாழ்த்திப் பின் வருமாறு கூறினான்:— "நாரத! வாழ்க. நீ விரும்பிய படி அத்தலத்தின் மான்மியத்தை விரிவாய்க் கூறு கின்றேன். அத்தலத்தில் அமர்ந்துள்ள திருவிண் ணகரப்பனுடைய பெருமையை முழுதும் கூறல் ஆயிர

நாக் கொண்ட ஆதிசேடனாலும் இயலாது. ஆயினும் என் அறிவுக்கேற்றவாறு சிறிது கூறுகின்றேன். கவனத்துடன் கேட்பாயாக—

## எம்பெருமானிடம் திருத்துழாயின் வேண்டுகோள்

திருத்துழாய்த் தேவி முன்பு அமுதத் திவலைகளி னின்று பிறந்தாள். அவள் ஒருகால் எம்பெருமானை யடைந்து வணங்கி நின்று, "நாதனே! நீங்கள் இலக்குமியை மார்பில் வீற்றிருக்கச் செய்தீர்கள். அதனால் அவள் தனிச் சிறப்புற்றுப் பெருமிதங்கொண்டு நிற்கின்றாள். என் மாற்றாளாகிய அவளுக்குமட்டும் உள்ள சிறப்பை நான் எவ்வாறு பொறுத்துக்கொண் டிருப்பேன்? அடியாளிடம் தங்களுக்கு அன்பு இருப்பது உண்மையாயின் என்னையும் அங்ஙனமே திருமார்பில் தரிக்கவேண்டும்" என்று வேண்டினாள்.

## திருத்துழாய்த்தேவி வரம் பெறுதல்

இதைக் கேட்ட எம்பெருமானும் திருத்துழாய்த் தேவியை நோக்கிப் பின்வருமாறு கூறித் தேற்றினான்— "தேவியே! இலக்குமி முன் கடுந்தவம் புரிந்து என் மார்பை இடமாகக் கொண்டாள். அவள் பூமிதேவி யின் வடிவங்கொண்டு மண்ணுலகில் கங்கையிலும், சிறந்த காவிரியாற்றின் தென்புறத்தில் மார்க்கண்டேய முனிவருக்குப் புதல்வியாகப் பிறக்கப் போகின்றாள். அதற்கு முன்பே நீ அம்முனிவரின் தவவனத்திற்குச் சென்று செடியுருவில் சிறிது காலம் இருப்பாயாகில், சில மாதங்களில் உன் அடியில் இலக்குமி, பூமிதேவியாக அவதரிப்பாள். பின் சில நாள் கழித்து யான் அவ்விடத் திற்கு வந்து அத்தேவியை மணம்புரிந்து, மார்க்கண்டேய ருடைய வேண்டுகோளுக்கு இணங்கிப் பூமிதேவியுடன் அங்கு நீடூழி காலம் வசிப்பேன். உனக்கு அப்பொழுது

பல பெருமைகள் ஏற்படும். உன் இதழ்களால் என்னைப் பூசனை செய்பவன் செல்வம், தானியம் முதலியவற்றைப் பெறுவான்; ஒவ்வோ ரிதழுக்கும் அசுவமேத வேள்வி யின் பலனை யடைவான். உன் வனத்தை உறைவிடமாகக் கொண்ட மானிடர், விலங்கு முதலியவற்றுக்கு யான் வைகுந்தத்தை யளிப்பது உறுதி. நீ உறையும் வனம் "திருத்துழாய்க் காடு" (துளஸிவனம்) என்று உன் பெய ரால் வழங்கும். உன் தலத்திலேயே நெடுங்காலம் உறை வேனாதலின் அத்தலம் மண்ணுலகிலுள்ள விண்ணகர மெனப் பெயர் படைத்து விளங்கும். இங்ஙனம் நீ எல்லாப் பெருமைகளையும் பெறப்போவதால் சிறிதும் வருந்த வேண்டாம்" என்று. இதைக் கேட்டு மனந்தேறி மகிழ்வு பெற்ற திருத்துழாய்த்தேவி, திருக்குடந்தைக்கு நான்கு மைல் தூரத்தில் கீழ்த்திசையில் காவிரியின் தென் புறத்தில் பற்பல கனிமரங்களால் சூழப் பெற்றுப் பறவை களின் இன்னொலி நிறைந்த ஒரு வனத்தில் ஒரு செடி வடிவு படைத்து வாழ்ந்தாள். அன்றுமுதல் அவ்வனம் திருத் துழாய்க் காடு என அழைக்கப்பட்டு வந்தது.

### மார்க்கண்டேயர் தவம் புரிதல்

சில நாள் கழித்துத் தவத்தில் மேம்பட்டு விளங்கிய மிருகண்டு என்னும் முனிவருக்குச் சிறந்த புதல்வர் ஒருவர் பிறந்தார். மிருகண்டு முனிவரின் புத்திரராதலின் அவர் மார்க்கண்டேய ரெனப் பெயர்பெற்றார். தந்தை தம் புதல்வருக்கு உரிய காலத்தில் சாஸ்த்ர முறைப் படி ஜாதகர்மம் முதலிய எல்லா வைதிகச் சடங்குகளை யும் செய்வித்துக் காலத்தில் உபநயனம் செய்து வேதங் களையும் வேதாந்தங்களையும் பயில்வித்தார். மார்க்கண் டேயரும் சிறந்த அறிவு பெற்று நற்குணங்கள் நிரம்பப் பெற்று மந்த்ர சாஸ்த்ரங்களிலும் கரைகண்டவரானார். அம் முனிவர் பல தலங்களில் யாத்திரை செய்து அந்த

எம்பெருமானுடைய திருவடிவங்களைத் தரிசித்துப் புண்ணியதீர்த்தங்களிலும் நீராடிக்கொண்டு இந்தத் திருத்துழாய்க் காட்டுக்கு வந்துசேர்ந்தார். இந்த வனம் இயற்கைக் காட்சி நிறைந்து, தனிமையில் நின்று தவம் புரிவதற்கேற்ற இடமாக இருப்பதைக் கண்டு மார்க்கண்டேயர் மிக மகிழ்ந்து இங்கேயே இருந்து தவம் புரிய விரும்பினர். இந்த வனத்திற்குத் தென்புறத்தில் கங்கை, கோதாவரி, யமுனை என்னும் நதிகள் சிறப்பாக ஓடுவதும் அவரது தீர்மானத்தை வலியுறுத்தியது. அவருள்ளத்தில் பூதேவியைத் தம புதல்வியாகப் பெற்று அத்தலத்தில் எம்பெருமானைத் தம் மணவாளப்பிள்ளையாகப் பெறவேண்டுமென்று அவா உண்டாயிற்று. அதற்காக அம் முனிவர் அத்தலத்திலே தங்கிக் கடுந் தவம் புரிய முற்பட்டுக் கோவிலுக்கருகிலுள்ள புஷ்காணியில் தினந்தோறும் முக்காலமும் நீராடிக் கிழங்கையே உணவாகக்கொண்டு கொடிய விரதத்தைக் கைக்கொண்டு திருத்துழாய்க் காட்டில் ஒரு திருத்துழாய்ச் செடியின் அடியில் அமர்ந்து தவம்புரியலானர்.

### பெருமாள் — பிராட்டி சம்பாஷணை

இங்ஙனம் மார்க்கண்டேய முனிவர் அவ்வனத்தில் ஆயிரமாண்டுகள் வரை கடுந்தவம் புரிய, அவரது தவத்தால் எம்பெருமான் மிக்க களிப்படைந்து அவர் கருத்தை நிறைவேற்றத் திருவுள்ளங்கொண்டான்; பின் அவன் தன்னுடன் உறையும் பெரிய பிராட்டியை நோக்கி, "தேவி! நம் அடியாருள் சிறந்த மார்க்கண்டேய முனிவன் மிகக் கடுந்தவம் நெடுங்காலமாகப் புரிகின்றான். அவன் விருப்பத்தைத் தலைக்கட்டிவைப்பது நம் கடமையன்றோ! நீ ஒரு கன்னிகை வடிவங்கொண்டு மண்ணுலகில் திருவிண்ணகரெனும் தலத்திற்குச் சென்று திருத்துழாய்க் காட்டில் திருத்துழாய்ச் செடியினடியில் பிறந்து,

அங்குத் தவம் புரியும் மார்க்கண்டேய முனிவனுக்குப் புத்திரியாகி அவனுல் வளர்க்கப்பெற்றிரு. யானும் அங்கு வந்து தோன்றி, அந்தத் தலத்தில் அம்முனிவனுக்கும் மற்றுள்ளோருக்கும் அருள் புரிந்துகொண்டு எப்பொழுதும் உன்னுடன் உறைவேன்" என்று கூறினன்.

## பூமிதேவியின் அவதாரம்

இதைக் கேட்ட திருமகளும் 'அங்ஙனமே யாகுக' என்று கூறிப் பெண் குழந்தை வடிவங்கொண்டு திருத்துழாய்க் காட்டில் அச்செடியின் அடியில் தோன்றினள். பரந்த கண்கள்; பருத்து நீண்ட கைகள்; சந்திரனைப் பழிக்கும் முகம்; சண்பக மொட்டுப் போன்ற புன்சிரிப்பு; கண்ணுடி போன்ற கன்னம்— இத்தகைய சிறப்புடன் ஈராண்டுக் குழந்தையாகத் தோற்றமளிக்கும் இக் குழந்தையைப் பார்த்தார் மார்க்கண்டேய முனிவர்; பெருமகிழ்வும மிக்க வியப்புங் கொண்டார்; பேரன்புடன் வா வா என்று அழைத்தார். 'நீ யார்? உன் பெற்றேர் யாவர்? உன் பெயர் யாது?' என்று வினவினர். அக்குழந்தையும் முனிவரை நோக்கி, "சுவாமி! 'நான் யார்' என்பதையும், 'எதற்காக இங்கு வந்தேன்' என்பதையும் அறியேன. எனக்குப் பெற்றேர், உற்ருர், தோழர் முதலிய அனைவரும் தாங்களே" என்று கூறிக்கொண்டே முனிவரின் மடியில் பாய்ந்து அமர்ந்தாள். முனிவரும் பெருஞ் செல்வம் வாய்ந்த வறியன்போல மகிழ்ந்து குழந்தையை வாரியெடுத்து உச்சி முகர்ந்து முத்தமளித்து, தரையினின்று தோன்றியதால் 'பூமிதேவி' என்று பெயரிட்டார்.

## முனிவர் கவலையடைதல்

மார்க்கண்டேய முனிவர் அக்குழந்தைக்கு ஏற்ற சிறந்த உண்டியளித்து மிக்க அன்புடன் வளர்த்து

வந்தார். சிறந்த அணிகளையும் அணிவித்து, அக் குழந்தை விரும்பியவையெல்லாம் வாங்கியளித்துத் தாயினும் மிக்க பரிவுகொண்டு வளர்த்தார்; சிறந்த கல்வி கற்பித்தார். சில ஆண்டுகள் சென்றன. புதல்வியும் பருவ மங்கையாய்த் திகழ்ந்தாள். எல்லாவகையிலும் ஒத்த மணமகனைத் தேடி நின்றார் முனிவர். முனிவர் குழுவில் அவளுடைய அழகு, குணம், கல்வி இவற்றிற்கு ஏற்ற மணமகன் கிடைத்திலன். முனிவர் சிந்தை கலங்கினார்; 'கன்னிக்குத் தந்தையா யிருப்பது மிக்க கவலையைத் தரு'மென வழங்கும் மொழிக்குத் தாம் இலக்கானதை நினைந்து வருந்தினர்.

### எம்பெருமான் முதியனாய் வருதல்

அவருடைய கவலையை நினைத்தான் திருநாரணன்; அவர்பால் இரக்கங் கொண்டான். திருமகளை அம் முனிவருக்குக் கன்னியாகப் பிறக்கும்படி முதலில் கட்டளையிட்டபோது தான் கூறிய மொழியை நினைந்தான். மார்க்கண்டேய முனிவரிடத்துத் தான் ஒரு சிறிய நாடகம் நடித்துப் பின் அவரது கவலையைப் போக்க முற்பட்டான். வய்து முதிர்ந்த ஓர் அந்தண வேடம் பூண்டான். ஒரு கந்தையை யுடுத்தான்; கையில் கோலை ஊன்றினன்; மற்றொரு கையில் கமண்டலுவைப் பிடித்தான்; அடிநிலைகளை அடிகளில் தாங்கினான்; கபம் மிக்க முகத்துடன் இருமிக்கொண்டு, தள்ளாடிப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு திருத்துழாய்க் காட்டில் மார்க்கண்டேய முனிவரின் குடிலுக்கு வந்தான். அவன் எழுந்தருளிய நாள் பங்குனி மாதம், ஏகாதசி, திருவோண நட்சத்திரம்.

### முனிவர் வரவேற்றல்

மார்க்கண்டேய முனிவரும் மிகப் பெரிய ஒரு நல் விருந்தினர் வருவதை நோக்கி எல்லையற்ற மகிழ்ச்சி

கொண்டார்; சிறிது தூரம் சென்று எதிர்கொண்டழைத்துவந்தார்; ஆஸநமளித்தார். அவன் புனிதத் திருவடிகளைத் தம் கைகளால் நன்கு கழுவினார். "அந்தணர் பெருமானே! தங்கள் வரவு நல்வரவாகுக. அடியேனுடைய பிறவியும் செயலும் இப்பொழுதே பயன்பெற்றன. தாங்கள் இங்கு எழுந்தருளிய காரணம் யாது? நம்மிருவருக்கும் மாத்தியான்னிக காலம் கடக்கின்றது. தங்கள் உள்ளத்தில் உள்ளதை விரைவில் மொழிந்தருள வேண்டும்" என்று முனிவர் முதியோரிடம் கூறினார்.

## முதியவரின் வேண்டுகோள்

இங்ஙனம் முனிவர் கூறியதைக் கேட்ட முதுமை வேடங்கொண்ட பகவான் முனிவரை நோக்கி, "மஹர்ஷியே! அடியேன் கூறுவதைக் கேட்க வேண்டுகின்றேன். எனக்குப் புத்திரனோ மனைவியோ இல்லை. இவ்வுலகில் வேறு உறவினர்களும் இல்லை. 'புத்திரனில்லாதவனுக்குச் சிறந்த உலகங்கள் கிடையா'வென்று வேதங்கள் முறையிடுகின்றன. மனைவியில்லாதவனுக்கு இல்லறமில்லை; வீடு, தான்யம், செல்வம், பசுக்கள் முதலியன ஒன்றும் விளங்குவதில்லை. அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு பேறுகளுக்கும் மனைவியே காரணமாகின்றாள். எவ்வகைச் சிறப்புக்கும் காரணமாகிய மனைவியில்லாமையால் கிருஹஸ்தனுக்கு உரிய அக்னியற்ற யான் எவ்வாறு உயிர் வாழ்வேன்? தங்களுக்குத் தெரியாத தர்மமில்லை. ஆதலால் தங்கள் புத்திரியை எனக்கு மணம்செய்வித்து என் இல்லறத்தை வழுவற நடப்பித்து என்னை வாழ்வித்தருள வேண்டுகின்றேன். இதைத் தங்களிடம் யாசிக்கவே இங்கு வந்தேன். தங்கள் கன்னிகையை ஒருவனுக்கு மணம் செய்வித்தே யாகவேண்டுமன்றோ? யானும் உயர்ந்த குலத்திற் பிறந்தவன். என் சரீரம் சௌக்கியக் குறைவால் சற்று

முதிர்ந்ததாகக் காணப்படுகின்றதேயன்றி, வயது அதிக மாகவில்லை. என் வேண்டுகோளை மறுக்கக்கூடாது'' என்று வேண்டிக்கொண்டார்.

### முனிவர்—முதியவர் சம்பாஷணை

இங்ஙனம் அம் முதியவர் கூறியதைக் கேட்ட மார்க் கண்டேயர் சிந்தை கலங்கிச் செய்வதொன்றறியாதவராய் அவரை நோக்கிச் "சுவாமி! முதிய நிலையிலுள்ள தாங்கள் சிறுமியாகிய என் கன்னியை மணம்புரிவது எங்ஙனம் பொருந்தும்? அடியேனும் இவ்விளங்கன்னியைத் தங் கட்கு எங்ஙனம் மனந்துணிந்து கொடுப்பேன்? அடியேன் புதல்வியால் தாங்கள் எத்தகைய பலனைப் பெற முடியும்? அங்ஙனம் செய்வதால் தங்களுக்கும் எனக்கும் பாபம் தான் உண்டாகும். தங்களுடைய நன்மையைக் கருதிக் கூறுகின்றேன். இந்தப் பருவத்தில் மணந்துகொள்வ தென்ற எண்ணத்தைக் கைவிடுங்கள்'' என்று கூறினர்.

அவ்வந்தணர் இதைக் கேட்டு முனிவர் திருவடிகளைப் பற்றிக்கொண்டு, "ஸ்வாமி! தங்கள் நல்லுரைகள் என் செவியிற் புகவில்லை. தங்கள் புதல்வியையே என் மனம் நாடுகின்றது. அவளை எனக்கு மணம் புரிவித்தால் உயிர் வாழ்வேன். இல்லையேல் தங்களுக்கு எதிரில் என் உயிரை இப்பொழுதே விடுவேன். அப்பாவமும் தங் களையே சாரும்'' என்று கூறினர்.

### முனிவர் பகவானைச் சரணமடைதல்

முனிவரும் இதைக் கேட்டு அந்தணரை நோக்கி, "ஸ்வாமி! தங்களுக்கு இவ்வுலகில் உறவினர்களே யில்லை யென்றீர்கள். என் புதல்வியை மணந்தால் தங்களுக்கு அவளே உணவு சமைத்துப் பறிமாறவேண்டும். இள நங்கையாகிய என் புதல்வி உணவின் சுவையைக் கூட அறியாதவள். அவள் தங்களுக்காகச் சமைக்கும்

அன்னம் காய்கறி முதலியவற்றில் லவணம் சேர்க்கக் கூடத் தவறிவிடக்கூடும். அதனால் தாங்கள் சினங் கொண்டு அவளை அடிக்க நேரும். அதை யறிந்து யானும் சினந்து தங்களைச் சபிக்க முற்படுவேன். இங்ஙனமே அடிக்கடி நேரிடும். இவற்றைக் கருதியாயினும் தாங்கள் மணம் புரியும் எண்ணத்தைக் கைவிடவேண்டும். ஆனால் தாங்களோ என் புதல்வியைத் தராவிடில் உயிரை விடு வதாகக் கூறுகின்றீர். இப்பொழுது யான் என்ன செய் வேன்? எனக்கு ஒரு வழி காட்டுமாறு எம்பெருமானைச் சரணமடைகின்றேன்'' என்று கூறி ஸ்ரீமந் நாராயணனைப் பலவாறு அவன் பெருமைகளைக் கூறிப் பின்வருமாறு துதித்தார்:—

"ஸகல லோகநாயகனே! தாமரைக் கண்ணா! இழிவான குணங்களற்றவனே! உயர்குணங்களுக்கு உறைவிடமாயுள்ளவனே! உன்னடிகளைத் தொழு கின்றேன். எனக்கு இப்பொழுது நேர்ந்துள்ள சங்கடத்தில் நீயே என்னைக் காத்தருளவேண்டும். என்னைப் பரீட்சிப்பதற்காக நீயே இவ்வாறு கிழ வேடம் பூண்டு என் குடிலுக்கு வந்திருப்பதாகவும் ஓர் ஐயம் என் உள்ளத்தில் உதிக்கின்றது. எவ்வாறேனும் இத் துயரினின்றும் என்னை நீயே விடுவிக்கவேண்டும். உன்னடி பணிந்தேன்."

### பூமிதேவியின் கருத்தை வினவுதல்

இங்ஙனம் எம்பெருமானைத் துதித்துப் பின் தம் கன்னியின் கருத்தையும் கேட்டறிய விரும்பிப் புதல் வியை அழைத்து—"குழந்தாய்! நீ மணப் பருவத்தை எய்தியுள்ளாய். இங்கு எதிரே நிற்கும் அந்தணரைப் பார். இவர் உன்னை மணக்க விரும்பி என்னிடம் வந் துள்ளார். தமக்கு உன்னைக் கொடுக்காவிட்டால் இப் பொழுதே இங்கு உயிர்விடுவதாய்க் கூறுகின்றார். நான்

தர்ம பாசத்தால் கட்டுண்டு தவிக்கின்றேன். உன் கருத்தை வெளியிடுவாயாக'' என்று கூறினர். இங்ஙனம் தன் தந்தை உரைத்ததைக் கேட்ட பூமிதேவியும் தான் ஒன்றையும் அறியாதவள் போல் நடித்துத் தன் தந்தையை நோக்கிப் ''பருவ மங்கையாகிய யான் இக்கிழவருக்கு மாலையிட உடன்படேன். அங்ஙனம் செய்ய என்னைக் கட்டாயப்படுத்தினல் உடனே யான் உயிரிழப்பேன். இது உறுதி'' என்று உரைத்தாள்.

### பின்னும் முனிவர் பகவானைத் துதித்தல்

இதைக் கேட்ட முனிவர் மிக வருந்தித் தவித்து வேறொரு புகலின்றி எம்பெருமானைச் சரணமடைந்து, ''அழிவற்ற திருமேனி யுடையவனே திருமகள் நாயகனே! அழிவற்றவனே! அடியார்களுக்கு வரும் இன்னலைப் போக்கி அவர்களுக்கு அருள்புரிபவனே! உனக்கு மங்களம். கருணையே வடிவுகொண்டவனே! புண்ணியம் பாபம் இவற்றுக்கேற்ற பலனை யளிப்பவனே! உனக்கு மங்களம். இப்பொழுது தர்ம பாசத்தால் கட்டுண்டு தவிக்கும் எனக்கு ஒரு வழி காட்டி, என்னை இத்துன்பக் கடலினின்று கைதூக்கிவிடவேண்டும். உன்னையன்றி வேறொரு புகலிடம் காண்கிலேன்'' என்று மறுபடியும் பலவாறு வேண்டிநின்றுர்.

### முனிவர் கண்ட காட்சி

நெடுநேரம் கண்களை மூடி எம்பெருமானது திருமேனியைத் தமது உள்ளத்துக்கொண்டு தியான நிலையில் ஆழ்ந்தார். நெடும்போது கழித்துத் தம் கண்களைத் திறந்தார். என்ன ஆச்சர்யம்!!! நின்ற முதியவரைக் காணவில்லை. எம்பெருமான் எதிரே காட்சியளித்துக்கொண்டு நிற்கின்றுன். இளமை வடிவம்; அரையில் பொன்னுடை; இருதிருக்கைகளில் திருவாழியும்

திருச்சங்கும்; திருஅரையில் ஒரு திருக்கை; மற்ருென்று கன்னிகாதானத்தை ஏற்கும் திருக்கை. முடியில் ஒளியுமிழும் கிரீடம்; திருமேனியில் சுடர்விடும் எல்லையற்ற மணியணிகள் — இத்தகைய பெருமையுடன் கருமாமுகில் போல் கண்ணெதிரே காட்சிதந்து நிற்கும் எம்பெருமானைச் சேவித்தார் முனிவர்; தொழுதார்; ஆடினர்; பாடினர்; வியப்பும் களிப்பும் உள்ளடங்கப் பெற்றிலர்; மகிழ்ச்சிக் கண்ணீரைப் பெருக்கினர்; உடல் சிலிர்க்கப் பெற்ருர்; அவனது பெருமையை வாயாரப் புகழ்ந்து பாடினர்.

### லவணத்தின் கலப்பைப் பகவான் மறுத்தல்

முனிவரது பக்தியால் மகிழ்ந்த எம்பெருமான் மேகத்தினெலிபோல் கம்பீரமாகப் பேசத் தொடங்கி முனிவரை நோக்கி — "மஹர்ஷியே! உம்முடைய பக்தியை மெச்சினேன். யானே உமக்கு மருமகனுகப் போகின்றேன். இப்பொழுது உம்முடைய புதல்வியான பூமிதேவியை எனக்கு மணம் செய்விக்கவேண்டும். உம்முடைய பெண் சிறுமியாதலால் உணவிலும் காய் கறிகளிலும் லவணம் சேர்க்கக்கூடத் தெரியாதென்று கூறினீர். அவளது கையால் லவணமின்றிச் சமைத்த உணவே எனக்கு மிகச் சுவையுடையதாயிருக்கும். யானும் லவணத்தை முற்றிலும் வெறுத்து அறவே விலக்கிவிடுகின்றேன. லவணமின்றிச் சமைத்த உணவை நான் உண்டபின் எஞ்சியதைப் பக்தியோடு உண்டவனுக்கு அவ்வுணவு மிக்க சுவையுடையதாயிருக்கும். லவணத்துடன் என் கோயிலுக்குள் புகுமவன் சந்திரசூரியர் உள்ளவரையில் கொடிய நாகத்தில் உழல்வான். லவண ஸம்பந்தமின்றி யான் உண்ணும் உணவை மகிழ்ச்சியோடு உண்பவன் ஆயிரம் சாந்திராயண விரதங்களின் பலனைப் பெறுவான். அடியாரில்

சிறந்த நீர் உம் கன்னியை எனக்கு மணம்புரிவித்து, விரும்பிய வரங்களை என்பால் பெற்றுக்கொள்வீராக" என்று கூறியருளினன்.

### முனிவர் மணத்திற்கிசைதலும் வரங் கேட்டலும்

இதைக் கேட்ட முனிவர் உவகை பொங்கிய உள்ளத்தராய் எம்பெருமானை நோக்கி, "என்னப்பனே! என் புதல்வியை மனைவியாக ஏற்றுக்கொள். என் நெடுநாளைய தவம் இன்றே பழுத்தது; என் பிறவியும் செயலும் இன்றே பயன்பெற்றன. என் குலம் இன்றே கரையேற்றப்பெற்றது. உன்னைக் கண்ணாரக் கண்டு களிக்கும் இப்பேறு தவிர, யான் வேண்டுவது வேறு எது? ஆயினும் உன் கட்டளைக்கிணங்கி மூன்று வரங்களை உன்னிடம் பெற விரும்புகின்றேன். அவையாவன:- (1) என் புதல்வியாகிய பூமிதேவியை நீ மணந்து இந்தத் தலத்திலேயே எந்நாளும் உறைதல்வேண்டும். (2) எல்லா நன்மைகளையும் அளிக்கவல்ல இந்த வனம் என் பெயரால் விளங்க வேண்டும். (3) லவணத்தின் ஸம்பந்தமில்லாமல் நீ அமுதுசெய்யும் உணவு உன் அடியார்களுக்கு மிக்க சுவையுடையதா யிருக்கவேண்டும். இந்த மூன்று வரங்களையும் எனக்கு அளிப்பதுடன் கடைசியில் எனக்கு மோக்ஷத்தையும் அருளவேண்டும்" என்று கூறி முடித்தார்.

எம்பெருமானும் மார்க்கண்டேய முனிவரை நோக்கி, "முனிவரே! நீர் விரும்பியவாறே அவ்வரங்களை யளித்தேன். நான் விண்ணுலகினின்று இத்தலத்தை விரும்பி இங்கு வந்து தோன்றியபடியால் இத்தலம் "திருவிண்ணகர"மெனப் பெயர்பெறுக. நீரும் துளஸியும் தவம் புரிந்த இடமாதலின் இத்தலம் முறையே "மார்க்கண்டேய க்ஷேத்ரம்", "துளஸி வனம்" எனப் பெயர்பெறுக. இத்தலத்தில் சிறி . காலம் வசிப்பவன் தான் விரும்பிய

பலன்களைப் பெறுவதில் ஐயமில்லை. இனி உம் புதல்வியை வரும் ஐப்பசி மாதத்தில் எனக்கு மணம்புரிவிக்கக் கடவீர்" என்று உரைத்தான்.

முனிவர் இதைக் கேட்டு "என் ஐயனே! நீயும் ஒருவன்; என் புதல்விக்கும் உற்றார் உறவினர் இல்லை, ஆதலின் தேவர்களை அழைத்து அவர்களின் உதவியால் திருமணத்தை நடத்தவேண்டும்" என்றார். எம்பெருமான் சில மாதங் கழித்துப் பறவைகட்கரசனாகிய கருடனை நினைத்தான். அக்கணமே கருடன் இப்பூவுலகிற்கு வந்து எம்பெருமானை வணங்கித் துதித்துத் தன்னை அழைத்த காரணத்தைக் கூறும்படி வேண்டினான்.

### கருடனிடம் திருமணவோலையனுப்புதல்

எம்பெருமான் கருடனை நோக்கிப் "பறவைகட்கு அரசே! மார்க்கண்டேய முனிவரின் தவப் புதல்வியாகிய பூமிதேவியை யான் மணம்புரிவதாய் உறுதிகொண்டுள்ளேன். மிக்க வல்லமை பெற்ற நீ இப்பொழுதே ஸத்யலோகம் சென்று பிரமனிடம் திருமணப் பத்திரிகையை அளித்துவிட்டுப் பின் இந்திரன் வருணன் முதலிய திசைக்காவலரையும் மற்றுமுள்ள தேவரனைவரையும் அழைத்துக்கொண்டு விரைவில் இத்தலத்திற்கு வந்து நீயும் உடனிருந்து எனது திருமணத்தைச் சிறப்பாய் நடத்திவைப்பாயாக" என்று கட்டளையிட்டான்; திருமண விதழை வரைந்து அளித்துக் கருடனை அனுப்பினான்.

### கருடன் தேவர்களை அழைத்தல்

கருடன் எம்பெருமானுடைய கட்டளையை முடிமேல் தாங்கி விரைவில் சத்தியலோகம் சென்று பணிவுடன்

பிரமனெதிரில் நின்று "பெரியீர்! தேவாதிதேவனான எம்பெருமானுக்குத் திருமணம் நடக்கப்போகின்றது. மார்க்கண்டேய முனிவர் செய்த கடுந்தவத்தால் மகிழ்ந்த எம்பெருமான் அம் முனிவருக்கு மணவாளப் பிள்ளையாவதற்கு இசைந்துள்ளான். பெரிய பிராட்டியே பூமிதேவியென்ற பெயருடன் அம்முனிவருக்குப் புதல்வியாகப் பிறந்திருக்கின்றாள். பூவுலகில் துளஸிவனத்தில் அக்கன்னியை மார்க்கண்டேயர் எம்பெருமானுக்கு மணம் செய்விக்கப் போகின்றார். அந்த முனிவர் தவம் புரிந்ததும் பூமிதேவி தோன்றியதும் அந்த இடமேயாகும். அந்தத் தலம் "மார்க்கண்டேய க்ஷேத்ரம்" என்று வருங் காலத்தில் வழங்கப்போகின்றது; கும்பகோணமென்னும் க்ஷேத்ரத்திற்குக் கிழக்கே யுள்ளது. நீங்கள் இந்திரன் முதலிய தேவர்கள் அனைவருடனும் வந்து திருமணத்தைச் சிறப்புற நடாத்தி, திவ்ய தம்பதிகளைக் கண்ணாரக் கண்டுகளித்து, எம்பெருமானிடம் விடை பெற்றுத் தத்தம் இருப்பிடம் செல்க" என்று உரைத்துத் திருமணப் பத்திரிகையைப் பிரமனிடம் அளித்தான்.

பிரமனும் இதைக் கேட்டு உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்க அவ்வழைப்பிதழைப் பணிவுடன் பெற்றுத் தலையிற்சூடி மற்றைத் தேவருக்கு எதிரில் பின்வருமாறு படித்தான்:—

"மங்களம். பிரமனே! தேவர்க்குத் தலைவனாய் நாமகட்கு நாயகனான உனக்கு நாராயணனெனப் பெயர் பூண்ட யான் மனமார வாழ்த்துக் கூறுகின்றேன். யான் எப்போதும் சேமமுடனிருக்கின்றேன். நீயும் அங்ஙனமேயிருப்பாயென நம்புகிறேன். திருமகள் பூமிதேவியென்ற பெயருடன் பூவுலகில் துளஸிவனத்தில் மார்க்கண்டேய முனிவருக்குப் பெண்ணாகப் பிறந்துள்ளாள். அம்

முனிவர் என்னை மருகனாகப் பெறவேண்டுமென்று கடுந் தவம்புரிந்தார். யான் அதற்கிணங்கி, வருகின்ற ஐப்பசி மாதத்துத் திருவோணத் திருநட்சத்திரத்தில் பூமிதேவியை மணம்புரிந்துகொள்ள உறுதியுடையனா யிருக்கின்றேன். நீ எல்லாத் தேவருடனும் துளஸி வனத்திற்கு வந்து திருமணத்தை நடாத்தி மணமக்களைக் கண்டுகளித்துச் சேமமாய் உறைவிடம் சேர்வாயாக. நல்லவர்களைக் காக்கவும் தீயவர்களை அழிக்கவும் அடியார்களுக்கு அருளவும் யுகந்தோறும் இந் நிலவுலகில் அவதரிப்பேன்.

இங்ஙனம்
துளஸிவனம் உன்னிடம் அன்புள்ள
**திருமகள்கொழுநன்"**

**தேவர்களின் வருகை**

இந்தத் திருமணச்செய்தியைக் கேட்ட தேவரனைவரும் அவர்கள் மனைவிமார்களும் மிக மகிழ்ந்து உரிய காலத்தில் பிரமனை முன்னிட்டுத் துளஸிவனம் வந்து சேர்ந்தார்கள். பிரமனின் மனைவி நாமகள் இயற்கையழகு ததும்பி நிற்கும் பூமிதேவிக்குச் செயற்கையணிகளைப் பூட்டி அவ்வழகையும் கண்டு அனைவரும் இன்பமெய்துமாறு செய்தாள். இந்திரன் மனைவியான இந்திராணி பூமிதேவியின் மெல்லிய திருவடிகளுக்கு உரிய அணிகளைப் பூட்டிக் கண்டு மகிழ்ந்தாள். இங்ஙனமே மற்ற தேவர் மனைவியரும் தங்கள் தங்கள் அன்பிற்கும் விருப்பிற்கும் ஏற்றவாறு பூமிதேவிக்குப் பற்பல அணிகளை அணிவித்து அவளது அழகைப் பருகி மகிழ்ந்தனர்.

**திருமண வைபவம்**

இங்ஙனம் மிக்க அழகு நிரம்பிய தன் புதல்வியை மார்க்கண்டேயர் அங்கு மணக்கோலம் பூண்டு கண்டவர் கண்களைக் கவர்ந்துநின்ற எம்பெருமானது கையில்

ஐப்பசி மாதத்துத் திருவோண நட்சத்திரத்தில் சுபமான வேளையில் கொடுத்துத் தேவர்கள், முனிவர்கள், அவர் மனைவியர் முதலிய பல்லோர் முன்னிலையில் கன்னிகா தானம் செய்து மனமகிழ்ந்து நின்றார். பின் "கௌதுகம்" என்னும் மங்கலநாண் பூமிதேவியின் கையில் எம் பெருமானால் கட்டப்பட்டது. எம்பெருமானும் பூமிதேவி யின் மெல்லிய கரத்தைத் தன் கரத்தால் பிடித்து மும் முறை தீவலம் வந்து விகனச சூத்திரத்தில் கூறியபடி வைகாநசமுறையில் பூமிதேவியை மணந்துகொண்டு பூமிதேவியோடு சேர்ந்து நின்று அனைவருக்கும் காட்சி யளித்தான். அங்குத் திருமண வைபவத்தைக் கண்டு களிக்கக் கூடியிருந்த தேவர், முனிவர் முதலிய அனை வரும் மணம்புரிந்து காட்சியளித்த திவ்ய தம்பதிகளைக் கண்ணாரக்கண்டு வணங்கித் தாம் பிறந்த பயனெய்தினர்; பின் தெய்வீக மணமக்களிடம் பிரமனும் மற்ற தேவரும் விடைபெற்றுத் தத்தம் உறைவிடம் சென்றனர்.

### கோயிலமைத்து வாழ்தல்

எம்பெருமான் தன் கட்டளையின்படி தெய்வத் தச்ச னாகிய விசுவகருமனால் அமைக்கப்பட்ட திவ்ய ஆலயத் தில் பூமிதேவியுடன் தெய்வீக வாழ்க்கை நடத்தத் தொடங்கி, அந்தத் தலத்திற்கு "ஆகாசநகரம்", "திருவிண்ணகர்", "மார்க்கண்டேய க்ஷேத்ரம்" எனவும், திருக்கோயில் அமைந்துள்ள இடத்திற்குத் "துளஸி வனம்" எனவும், திருவிமானத்திற்குச் "சுத்தானந்த விமானம்" எனவும் தானே பெயரிட்டு அடியார்களுக்குக் காட்சிகொடுத்துக்கொண்டு இன்றும் விளங்குகின்றான்.

### பிரமன் பிரமோற்சவம் நடத்தல்

பின் ஒருகால் பிரமன் சத்திய லோகத்தினின்று பூவுலகில் திருவிண்ணகரத்திற்கு எல்லாத் தேவர்களுட

னும் வந்து திருவிண்ணகரப்பனைத் தொழுது வணங்கிப் பின்வருமாறு துதித்தான்—"எல்லையற்ற திருக்கலியாண குணங்களையுடையனே! ஒப்பற்ற அழகு நிறைந்த திருமேனியையுடையவனே! உன்னை வணங்குகின்றேன். தாவரசங்கமமெனப்படும் எல்லாப் பொருள்களையும் நீயே படைத்து, அளித்து, அழிக்கின்றாய். சந்திர சூரியர்கள் உன் கண்களாகவும், அக்னி உன் முகமாகவும், வாயு உன் காதுகளாகவும் விளங்கிப் பெருமைபெற்றனர். உன் உயர் குணங்களின் ஒரு சிறு பகுதியைக்கூடப் புகழ வல்லமையற்று மறைகள் தடுமாறுகின்றன."

இங்ஙனம் பிரமன் பலவாறு துதித்து வலம்வந்து தொழுது அவனது மகோற்சவத்தைத் தான் தேவர்களுடன் சிறப்பாக நடத்துவதற்குத் திருவிண்ணகரப்பனாகிய ஸ்ரீநிவாஸனிடம் அநுமதிவேண்டினான். பிரமனது பக்திப் பெருக்கின் வயப்பட்ட அவ்வெம்பெருமானும் மகிழ்ந்து அநுமதியளித்தான்.

பிரமனும் களிகூர்ந்து புரட்டாசி மாதத்தில் எம்பெருமானது உத்ஸவத்தைத் தொடங்கித் தேவர் முதலியவர்களுடன் கூடி ஒன்பது நாள் உத்ஸவத்தை நடத்திப் புரட்டாசி மாதத்துத் திருவோண நட்சத்திரத்தில் அஹோராத்ர புஷ்கரிணியில் பல தேவர்கள் முனிவர்கள் முதலியவருடன் அவப்ருத ஸ்நானத்தைத் திருவிண்ணகரப்பனோடு கூடச்செய்தான்; பின் வந்திருந்த அனைவருக்கும் உணவு, ஆடை, அணி முதலியவற்றைக் கொடுத்து விடைகொடுத்தனுப்பினான். அனைவரும் தத்தம் உறைவிடம் சென்றார்கள். பிரமனும் எம்பெருமானை வணங்கி ஸத்யலோகம் சென்றான்.

பின், பிரமன் மறுபடியும் பங்குனிமாதத்தில் எல்லாத் தேவர்களுடனும் திருவிண்ணகருக்கு வந்து

சித்திரைத் திருநட்சத்திரத்தன்று வைகாநஸ முறைப் படி கொடியேற்றி ஒன்பது நாள் உத்ஸவம் திருவிண்ணகரப்பனுக்கு நடாத்தி ஏகாதசி கூடிய திருவோணத் திருநட்சத்திரத்தன்று திருத்தேருத்ஸவம் கண்டருளச் செய்து முன்போல் அஹோராத்ர புஷ்கரிணியில் அவப்ருத ஸ்நானம் நடத்தித் தன்னிருப்பிடம் சென்முன். இங்ஙனமே இப்பொழுதும் ஆண்டுதோறும் புரட்டாசி பங்குனி ஆகிய இரண்டு மாதங்களிலும் பிரமன் எல்லாத் தேவருடனும் வந்து பிரமவுற்சவங்களை நடத்திச் செல்வதாக ஐதிஹ்யம் இருக்கின்றது.

## புண்ணிய தீர்த்தங்களின் வரலாறு

### அஹோராத்ர புஷ்கரிணி

திருவிண்ணகரப்பன் என்னும் ஸ்ரீநிவாஸனுடைய ஆலயத்திற்குள் வடபுறத்தில் "அஹோராத்ர புஷ்கரிணி" என்ற ஒரு பொய்கை இருக்கின்றது. இதற்கு இப் பெயர் வந்த காரணம் வருமாறு:— முன் ஒருகாலத்தில் 'தேவசர்மா' என்ற ஓரந்தணன் இருந்தான். அவன் வேதங்களிலும் அவற்றின் அங்கங்களிலும் கரை கண்டவன்; பரத்வாஜ முனிவரின் மரபில் தோன்றியவன்; சாஸ்திரங்கள் பலவற்றையும் கற்றறிந்தவன். அவன் ஒருகால் காதல்நோய்வாய்ப்பட்டுச் சோலையில் பூக்கொய்துகொண்டிருந்த ஜைமினி முனிவரின் புத்திரியைக் கட்டாயப்படுத்திப் புணர்ந்தான். அக்கன்னி தன் தந்தையான ஜைமினி முனிவரின் செவியில் படும்படி கதறினள். அம் முனிவர் அதைக் கேட்டுப் பதறி ஓடிவந்து பார்த்து உள்ள நிலையையறிந்து மிகச் சினந்து தம் புதல்வியைக் கெடுத்த அவ்வந்தணனைக் கிரௌஞ்சமென்னும் பட்சியாகுமாறு சபித்தார். தேவசர்மா அதைக் கேட்டு மிக வருந்தித் தன் குற்றத்தை

மன்னித்துச் சாபத்தினின்று விடுவிக்கும்படி அவரடிகளில் விழுந்து தொழுது வேண்டினன். அம் முனிவர் கருணைகூர்ந்து அவனைப் பறவையுருக்கொண்டவுடன் மார்க்கண்டேய க்ஷேத்ரம் சென்று ஆலயத்திற்குள் இருக்கும் பொய்கைக் கரையில் ஒரு மரக்கிளையில் தொங்கிநிற்கும்படியும், பின் ஒருகால் அந்தக் கிளை ஒரு புயற் காற்றினல் பொய்கையில் விழும்போது அதன் புண்ணியநீர் அப்பறவையின்மீது பட்டுச் சாபம் நீங்குமென்றும் கூறினர். இவ்வாறு ஜைமினி முனிவர் உரைத்ததும் அவ்வந்தணன் உடனே கிரௌஞ்சமெனும் பறவையுருப் பெற்றான். திருவிண்ணகரில் எம்பெருமானது ஆலயத்துள் இருக்கும் பொய்கைக் கரையில் உள்ள ஒரு மரத்தின் கிளையில் அப்பறவை தொங்கிக் கொண்டு நின்றது. சிலநாள் கழிந்தபின் முனிவர் கூறியபடி ஒரு பெரும் புயல் வீசியது. அதனல் நள்ளிரவில் அக்கிளை புஷ்கரிணி ஜலத்தில் விழுந்தது. அப்பொழுது அந்த நீர் பறவையின்மீது பட, பறவை சுய வடிவம் பெற்றது. பறவையுரு நீங்கப் பெற்ற அந்தணன் புஷ்கரிணி தீர்த்தத்தின் பெருமையால் அங்கு வந்த ஒரு தெய்விக விமானத்தில் ஏறிக்கொண்டு வைகுந்தத்திற்குப் புறப்பட்டான். அப்பொழுது நீர்க் கடவுளாகிய வருணனுடைய ஏவலாளர்கள் அவ்வந்தணனை நோக்கி—"அந்தண! இரவில் ஒரு சாமத்திற்குப் பிறகு புண்ணிய தீர்த்தங்களில் நீராடக்கூடாதென்பது விதி. அவ்வாறு செய்பவர்களைத் தண்டிக்குமாறு எங்கள் தலைவர் கட்டளையிட்டிருக்கிறார். நீ இந்த நள்ளிரவில் எப்படி இப்பொய்கையில் நீராடலாம்? நீ தண்டனைக்கு உரியன்." எனக் கூறித் தடுத்தனர். தெய்விக விமானத்தைக் கொண்டுவந்த விஷ்ணு தூதர்கள் அச்சொல்லைக் கேட்டு வருண தூதர்களை

நோக்கி "நண்பர்களே! நுண்மையான தருமத்தையும் இந்தப் பொய்கையின் பெருமையையும் அறியாமல் ஏன் இவ்வாறு கூறினீர்கள்? இப்பொய்கைக்குமட்டும் உள்ள தனிச்சிறப்பை நீங்கள் அறியீர். இரவும் பகலும் இக்குளத்தில் நீராடலாம். ஐயமிருப்பின் உங்கள் தலைவனான வருணனைக் கேட்டுத் தெளிமின்" என்று கூறி அவ்வந்தணனை அழைத்துக்கொண்டு வைகுந்தம் சென்றனர். அன்றுமுதல் அப் பொய்கை "அஹோராத்ர புஷ்கரிணி" எனப் பெயர்பெற்று விளங்குகின்றது. அந்தப் புஷ்கரிணியின் மேற்புறத்தில் உள்ள துளஸிச்செடியின் அடியில் அமர்ந்து திருவஷ்டாக்ஷரத்தை ஜபித்து, தாம்பூலம் தக்ஷிணை இவற்றுடன் அறுசுவையன்னத்தைப் பிறர்க்கு அளிப்பவன் எல்லாப் பாவங்களும் நீங்கப்பெற்று வைகுந்தத்தை அடைவான். செவ்வாய், வெள்ளி, சனிக்கிழமைகளிலும் திருவோணம், தான் பிறந்த நட்சத்திரம் இவற்றிலும் அந்தக் குளத்தில் நீராடி எம்பெருமானைத் தரிசிப்பவன் வைகுந்தம் சேருவான்.

### சார்ங்கதீர்த்தம்

கோவிலுக்குத் தென்மேற்குத் திசையில் "சார்ங்க தீர்த்தம்" என்ற ஒரு புண்ணிய தீர்த்தம் உளது. அந்தத் தீர்த்தம் தன்னை நினைத்த மாத்திரத்தில் உயர் கதியைத் தரவல்லது. அதில் நீராடினால் வரும் பலனைக் கூறவும் வேண்டுமோ? ஸ்ரீராமபிரானுடைய தனுஷ்கோடி தீர்த்தத்தைக் காட்டிலும் கோடிமடங்கு பெருமையுடையதாய் முதியோர் கூறுவர்.

### ஸூர்யதீர்த்தம்

மேற்கூறிய சார்ங்கதீர்த்தத்திற்கு வடபுறத்தில் "ஸூர்யதீர்த்தம்" என்ற ஒரு புண்ணியப் பொய்கை

இருக்கின்றது. அதைப்பற்றிக் கேட்டாலும், அதை நினைத்தாலும், பார்த்தாலும் மாந்தர் நற்கதிபெறுவது திண்ணம். அத்தீர்த்தத்தின் வரலாறு வருமாறு:— முன் ஒருகால் மஹேசுவரர் பிரமனுடைய தலையைக் கிள்ளியெறிந்துவிட்டார். அப்பாவத்தைப் போக்கப் புண்ணியத் தலயாத்திரை செய்தார். பாவம் நீங்க வில்லை. பின் மார்க்கண்டேய க்ஷேத்ரமாகிய திரு விண்ணகருக்கு வந்தார்; அஹோராத்ர புஷ்கரிணியில் நீராடி ஸ்ரீநிவாஸனைத் தரிசித்துப் பாவம் நீங்கப் பெற்றார்; மிக்க ஒளியையும் பெற்றார்; இன்றும் மேற் கூறிய ஸூர்ய தீர்த்தத்தின் கரையில் தவம்புரிந்து கொண்டிருக்கின்றார். முன்பு ஸூர்யன் நேரில் வந்து அக் குளத்தின் படித்துறை முதலியவற்றில் பழுதுபட்ட விடங்களைப் பண்படுத்தியபடியால் 'ஸூர்யதீர்த்தம்' எனப் பெயர்பெற்றது. முன் ஒருகால் மஹேசுவரர் தக்ஷனைக் கொன்றுவிட்டுக் கார்த்திகை மாதத்திய ஞாயிற்றுக்கிழமையன்று அந்த ஸூர்யதீர்த்தத்தில் தம் சடையைக் கழுவித் தாமும் நீராடியபடியால் தோஷம் நீங்கப் பெற்றார். எல்லாத் தேவர்களும் தினந் தோறும் அந்தத் தீர்த்தத்திற்கு வந்து நீராடுகின்றனர். கார்த்திகை மாதத்திய ஞாயிற்றுக்கிழமைகளில் அப் பொய்கையில் நீராடுபவன் உயர்கதி பெறுவான். அதில் நீராடி ஸ்ரீநிவாஸனை ஸேவியாமல் செல்பவன் கொடிய நரகத்தைப் பெறுவானென்பதில் ஐயமில்லை.

## இந்த்ரதீர்த்தம்

திருவிண்ணகரப்பனுக்கு வடகிழக்கில் 'இந்த்ர தீர்த்தம்' என்று ஒரு பொய்கை இருக்கின்றது. முன் ஒருகால்இந்த்ரன் அஹல்யையைப் புணர்ந்த பாவம் நீங்க அக்குளத்தில் நீராடித் தூய்மைபெற்றான். ஆதலின்

'இந்த்ர தீர்த்த'மென அதற்குப் பெயர் வந்தது. அதில் நீராடுவோன் எல்லா வேள்விகளின் பலனையும் பெறுவான்.

### ப்ரஹ்மதீர்த்தம்

அந்த இந்த்ரதீர்த்தத்தின் தென்புறத்தில் "ப்ரஹ்ம தீர்த்தம்" என்ற ஒரு குளம் இருக்கின்றது. முன் ஒருகால் பிரமதேவன் அதில் நீராடித் தவம் புரிந்து பிரமப்பதவிபெற்ருன். அதனல் "ப்ரஹ்ம தீர்த்தம்" என்று அது பெயர்பெற்றது. அதில் நீராடுபவன் தான் விரும்பும் எல்லாப் பலன்களையும் பெறுவான்.

### தக்ஷிணகங்கை

ஸ்ரீநிவாஸனுடைய ஆலயத்திற்குத் தெற்கில் தக்ஷிணகங்கையெனும் நதி ஓடுகின்றது. (இப்பொழுது நாட்டாறு என வழங்குகின்றது.) முன் ஒருகால் கங்கை நதியும் கோதாவரி நதியும் பிரமனிடம் சென்று வணங்கி "ஸ்வாமி! உலகிலுள்ள மக்கள் எங்களிடம் வந்து நீராடித் தங்கள் பாவங்கள் நீங்கப்பெற்றுச் செல்வதால் அந்தப் பாவங்கள் எங்களிடத்துத் தங்கிவிடுவதாய்த் தோன்றுகிறது. அவற்றைப் போக்கவல்ல ஓர் இடத்தை எங்களுக்குக் காட்டியருளவேண்டும்" என வேண்டினர். பிரமனும் "நதிகளே! கும்பகோண க்ஷேத்ரத்தில் ஸ்ரீசார்ங்கபாணிஸ்வாமிக்கு மாலையாக இருபுறமும் பெருகுவதற்கு, மேற்றிசையில் காவிரி இரண்டாகப் பிரிந்து ஓடுகிறது. நீங்கள் இருவரும் தென்புறத்தில் ஓடுகிற காவிரிப் பிரிவில் உட்புகுந்து கலந்து மார்க்கண்டேய க்ஷேத்ரத்திற்கு மேற்கில் குரோச தூரத்தில் இரண்டாகப் பிரிந்து பெருகுங்கள். பின் பூமிதேவி நாயகனை எம்பெருமானுக்குத் திரு

மஞ்சனத் தீர்த்தமாகப் பயன்படுவீர்களாயின் எல்லாப் பாவங்களினின்றும் விடுபடுவீர்கள்" என்று கூற அவர்களும் அங்ஙனமே செய்தனர்.

### தக்ஷிணகோதாவரி

தக்ஷிணகங்கைக்குத் தென்புறத்தில் தக்ஷிண கோதாவரி நதி செல்கின்றது. (இது கீர்த்திமானாறு என வழங்கும்.) இதில் நீராடுபவர்கள் எல்லாப் பாவங்களும் நீங்கப்பெறுவர்.

### தக்ஷிணயமுனை

மேற்கூறிய ஆற்றுக்குத் தென்புறத்தில் மற்றொரு புண்ணிய நதி ஓடுகின்றது. இதற்குத் "தக்ஷிண யமுனை" என்று பெயர். (இப்பொழுது "அரிசொல்லாறு" என வழங்குகின்றது.) இதில் நீராடுபவர் மிக்க புண்ணியத்தைப் பெறுவர்.

இவ்வாறு வட நாட்டில் ஓடிக்கொண்டிருந்த கங்கை, கோதாவரி, யமுனை ஆகிய மூன்று புண்ணிய நதிகளும் மார்க்கண்டேய க்ஷேத்ரத்தில் வந்து கூடித் திருவிண்ணகரப்பனது கைங்கர்யத்திற்குப் பயன்பட்டுச் சிறப்புறுகின்றன.

### லவணஸம்பந்தத்தால் வரும் தீமைகள்

இத்தகைய பல புண்ணிய தீர்த்தங்கள் நிறைந்த மார்க்கண்டேய க்ஷேத்ரமென்னும் திருவிண்ணகரின் பெருமையைக் கூற எம்பெருமானும் வல்லமையுடையனல்லன். ஸ்ரீநிவாஸனுடைய கோவிலுக்குள் லவணத்துடன் புகுமவன் கொடிய நரகத்தில் தள்ளப்படுவான். லவணத்தையும் லவணம் கலந்த அன்னம் கறி முதலியவற்றையும் கோவிலுக்குள் எடுத்துச் செல்பவனும் அத்தகைய உணவைக் கோவிலுக்குள் உண்பவனைத் தடை செய்யாதவனும் எம்பெருமானுடைய சினத்திற்கு ஆளாகி நெடுங்காலம் கொடிய நரகத்தில் உழலுவர். இது சத்தியம்; சத்தியம்.

### கைங்கரியங்களின் பலன்

அவ்வெம்பெருமானைத் துளஸியின் இதழ்களால் அர்ச்சனை செய்விப்பவன் ஒவ்வோர் இதழுக்கும் அசுவமேத வேள்வியின் பயனைப் பெறுவான். அந்தத் தலத்திற்கு நடந்து செல்லுபவன் ஒவ்வோரடிக்கும் மிக்க புண்ணியத்தை யடைவான். பசுவின் குளப்படியளவுள்ள நிலத்தை அவ்வெம்பெருமானுக்கு ஸமர்ப்பிப்பவன் மோக்ஷம்பெறுவான். சந்தனம், குங்குமம், புஷ்பம் இவற்றை ஸமர்ப்பிப்பவன் ப்ரஹ்மஹத்திதோஷத்தினின்றும் விடுபடுவான். அர்க்யபாத்ரம், தூபக்கால், தீபக்கால், திருமஞ்சனப் பாத்ரம், வெண்கல மணி, ஆடை இவற்றுள் ஒன்றை எம்பெருமானுக்கு ஸமர்ப்பிப்பவன் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவான். அவ்வெம்பெருமானுக்கு ஏதாவதூ ஓர் உத்ஸவத்தை நடாத்துபவன் ஸந்தான ஸம்பத்துக்களைப் பெறுவான். புரட்டாசி மாதத் திருவோணத்தன்று காலையில் புஷ்கரிணியில் நீராடி, தானங்களைச்செய்து, ஐந்து மறையோர்க்குப் பாயஸம் கொடுத்து எம்பெருமானை வணங்குபவன் ஐம்பெரும் பாதகங்கள் நீங்கப் பெறுவான். "துளஸிவனம்" என்று வாயினால் கூறியபொழுதே பாவங்கள் அகன்றுபோம். அந்த க்ஷேத்ரத்திற்கு வந்து எம்பெருமானை ஸேவிப்பவனுக்கும் மோக்ஷம் எளிதாயிருக்க, அவ்விடத்திலேயே உறைபவனைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ!

### இப்புராணத்தால் வரும் பயன்

இங்ஙனம் மார்க்கண்டேய க்ஷேத்ரத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீநிவாஸனென்னும் திருவிண்ணகரப்பனது பெருமையும் மார்க்கண்டேய க்ஷேத்ரமென்னும் திருவிண்ணகரின் சிறப்பும் கூறப்பட்டன. இத்தல மான்மியமாகிய இந்நூலை மஹர்ஷி

களும் பக்தியுடன் பாராயணம் செய்கின்றனர். இந்நூலைப் படிப்பவனும் கேட்பவனும் இவ்வுலகில் மிக்க புகழையும், நிறைந்த செல்வத்தையும், நீடூழிநாள் வாழ்வையும் பெற்று எம்பெருமானது அருளுக்கு இலக்காவர். அவருக்கு அறம், பொருள், இன்பம், வீடு இவற்றில் பெறமுடியாதது இல்லை. பௌர்ணமி, அமாவாஸ்யை, வெள்ளிக்கிழமை இந்த நாட்களிலும், சித்திரை, ஆடி, ஐப்பசி, தை மாதப் பிறப்பு நாட்களிலும் இத்தலமான்மியத்தைப் படிப்பவரும் கேட்பவரும் விரும்பிய பலன் அனைத்தையும் பெறுவர். இத்தலமான்மியத்தைப் படித்துக் கூறுபவர்க்கு ஆடை அணி முதலியவற்றைச் சம்மானம் செய்யவேண்டும். இப்புத்தகம் எந்த வீட்டில் இருக்கின்றதோ, அவ்வீடு குருக்ஷேத்ரத்திற்கு ஒப்பானது. அவ்வீட்டில் எல்லாச் செல்வமும் பெருகுமென்பதில் ஐயமில்லை.

### நாரதர் யாத்திரைசெய்தல்

இங்ஙனம் பிரமன் நாரதரின் வேண்டுகோளுக்கு இணங்கிப் பெருமகிழ்ச்சியுடன் திருவிண்ணகர்த் தலமான்மியத்தை விரிவாய்க் கூற, இதைக் கேட்டு உவகைக் கடலுள் மூழ்கிக்கிடந்த நாரதர் மிக்க நன்றியுடையராய்ப் பிரமனைப் பன்முறை தொழுது வணங்கி, திருவிண்ணகரப்பனைக் காணுமவாவோடு பூவுலகில் திருவிண்ணகரை நோக்கிப் பறந்து ஓடினர்.

திருவிண்ணகர்த்தலமான்மியம் முற்றிற்று

ஸ்ரீ பூமிநாச்சியார் திருவிண்ணகரப்பன் திருவடிகளே சரணம்

---



ஸ்ரீ:

ஆழ்வார்திருவடிகளே சரணம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

திருமங்கைமன்னன் அருளிச்செய்த

# பெரிய திருமொழி ஆறும்பத்து முதல்திருமொழி

**அவதாரிகை:—** இந்நிலவுலகில் பற்பல திவ்ய தேசங்கள் இருப்பதால் அவற்றையெல்லாம் இவ்வாழ்வார் ஆழ்ந்து அநுபவிக்கட்டுமென்று எம்பெருமான் திருவுள்ளங் கொண்டு இவ்வாழ்வாரை இவ்வுலகில் நிறுத்தினான். ஆனால் இவ்வுலகில் இந்த்ரியங்கள் பட்டிமேய்தற்குரிய தீய விஷயங்களும் நிரம்பியிருத்தலின் அவற்றை ஆழ்வார் கண்டு, "ஐயோ! இவை கிடக்கும் நிலத்திலேயோ நாமிருப்பது!" என்று அருவருத்து ஸம்ஸாரத்தில் தமக்குண்டான வெறுப்பையும் திருவிண்ணகரப்பனிடம் தமக்குள்ள விருப்பையும் அவனது திருவுள்ளத்திற் படும்படி ஒருகாலன்றிப் பலகாலும் அவன் திருவடிகளில் விண்ணப்பம் செய்கிறார் இத்திருமொழியில்—

**வண்டுணு நறுமலரிண்டைகொண்டு**
**பண்டை நம்வினைகெடவென்று அடிமேல்**
**தொண்டருமமரரும் பணியநின்று, அங்கு**
**அண்டமொடகலிடமளந்தவனே!**
**ஆண்டாய்! உனைக்காண்பதோர்**
**அருளெனக்கருளுதியேல்**
**வேண்டேன்மனைவாழ்க்கையை**
**விண்ணகர்மேயவனே! 1**

திருவிண்ணகரில் நித்யவாஸம் செய்யும் எம்பெருமானே! வண்டுகள் மொய்க்கும் மணமுள்ள மலர்களால் தொடுத்த மாலையைக் கொண்டுபோய் "எங்களுடைய நெடுநாளைய பாபங்கள் ஒழியவேண்டு"மென்று பாகவதர்களும் தேவர்களும் உன் திருவடிகளையடைய, அங்கிருந்தபடியே அண்டங்களுடன் அகன்ற பூமியையும் அளந்த

வனே! என்னை அடிமை கொண்டவனே! உன்னைச் சேவிப்பதாகிய ஒரு பாக்கியத்தை எனக்கு அருள்செய்ய வேண்டும். அடியேனும் இனி இந்த ஸம்ஸாரபந்தத்தை விரும்பமாட்டேன்.

[இப் பாசுரத்தின் பிற்பகுதியின் பொருளைப் பின்வரும் எட்டுப் பாசுரங்களின் பிற்பகுதிக்கும் சேர்த்துக்கொள்க.] 1

அண்ணல்செய்து அலைகடல்கடைந்து, அதனுள்
கண்ணுதல் நஞ்சுண்ணக்கண்டவனே!
விண்ணவரமுதுண அமுதில்வரும்
பெண்ணமுதுண்டஎம்பெருமானே!
ஆண்டாய்! உனைக்காண்பதோர்
அருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையை
விண்ணகர்மேயவனே! 2

திருவிண்ணகரப்பனே! தானே எல்லாவற்றுக்கும் நாதனெனக் காட்டிக்கொண்டு அலை வீசும் கடலைக் கடைந்து அதில் உண்டான விஷத்தை மஹேசுவரனுக்குக் கொடுத்து உண்பித்தவனே! தேவர்களுக்கு அமுதத்தைக்கொடுத்து உண்ணச்செய்து, அதிற்பிறந்த பெரிய பிராட்டியாகிய சிறந்த அமுதத்தை அடைந்து அநுபவிக்கும் எம்பெருமானே! ............ 2

குழல்நிறவண்ண! நின்கூறுகொண்ட
தழல்நிறவண்ணன் நண்ணார்நகரம்
விழ நனிமலைசிலைவளைவுசெய்து, அங்கு
அழல்நிறஅம்பதுவானவனே!
ஆண்டாய்! உனைக்காண்பதோர்
அருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையை
விண்ணகர்மேயவனே! 3

திருவிண்ணகரப்பனே! திருக்குழல்போன்ற நிறம் உள்ள திருமேனியையுடையவனே! உன் திருமேனியில் பங்கு கொண்டவனும் அக்னி போன்ற நிறமுடையவனுமான மஹேசுவரன் மஹாமேருமலையை வில்லாக வளைத்து த்ரிபுராஸுரனைக் கொன்றபோது அதில் தீப் போன்ற கொடிய அம்பாகவிருந்தவனே! ........... 3

நிலவொடுவெயில் நிலவிருசுடரும்
உலகமுமுயிர்களுமுண்டொருகால்
கலைதருகுழவியின் உருவினையாய்!
அலைகடலாலிலைவளர்ந்தவனே!
ஆண்டாய்! உனைக்காண்பதோர்
அருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையை
விண்ணகர்மேயவனே! 4

திருவிண்ணகரப்பனே! ப்ரளய காலத்தில் நிலவோடும் வெயிலோடும் உலவுகின்ற சந்த்ர ஸூர்யர்களையும் உலகங்களையும் அதிலுள்ள ப்ராணிகளையும் தன் திருவயிற்றில் வைத்துச் சிறிய பாலக வடிவுடன் அலை வீசுங் கடலில் ஓராலிலையில் திருக்கண் வளர்ந்தருளியவனே! ........... 4

பாரெழுகடலெழுமலையெழுமாய்ச்
சீர்கெழுமிவ்வுலகேழுமெல்லாம்
ஆர்கெழுவயிற்றினில் அடக்கிநின்று, அங்கு
ஓரெழுத்துஓருருவானவனே!
ஆண்டாய்! உனைக்காண்பதோர்
அருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையை
விண்ணகர்மேயவனே! 5

திருவிண்ணகரப்பனே! ஏழு உலகங்கட்கும், ஏழு கடல்கட்கும், ஏழு மலைகட்கும் தலைவனாய், ப்ரளய காலத்தில் அழகிய இவ்வுலகங்கள் ஏழையும் மிக அழகிய தன் வயிற்றில் அடக்கியவனே! சப்தங்களுக்கு மூலமான அகாரத்தாற் கூறப்படுமவனே! ........... 5

கார்கெழுகடல்களும்மலைகளுமாய்
ஏர்கெழுமுலகமுமாகிமுத
லார்களுமறிவருநிலையினையாய்ச்
சீர்கெழுநான்மறையானவனே!
ஆண்டாய்! உனைக்காண்பதோர்
அருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையை
விண்ணகர்மேயவனே! 6

திருவிண்ணகரப்பனே! மேகங்கள்படிந்த கடல்களையும் மலைகளையும் அழகிய உலகங்களையும் சரீரமாகக் கொண்டு பிரமன் முதலிய தேவருக்கும் அறிய அரிதான தன்மையையுடையவனே! சிறப்புமிக்க நான்கு வேதங்களின் வடிவமாயுள்ளவனே!........... 6

உருக்குறுநறுநெய்கொண்டுஆரழலில்
இருக்குறுமந்தணர்சந்தியின்வாய்
பெருக்கமொடமரர்களமரநல்கும்
இருக்கினிலின்னிசையானவனே!
ஆண்டாய்! உனைக்காண்பதோர்
அருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையை
விண்ணகர்மேயவனே! 7

திருவிண்ணகரப்பனே! அந்தணர்கள் தாங்கள் மிக்க செல்வம் பெறுவதற்காக உருக்கிய மணமுள்ள

நெய்யைக்கொண்டு ஒவ்வொரு ஸந்த்யாகாலத்திலும் அக்னியின் வாயிலாக வேதரிக்குக்களைக் கூறி ஹவிஸ் ஸுக்களைத் தேவருக்கு ஸமர்ப்பிக்கும்போது அம் மந்த்ரங்களின் ஸாரமான பிரணவத்தின் பொருளாய் விளங்குமவனே !........... 7

காதல்செய்திளையவர்கலவிதரும்
வேதனைவினையதுவெருவுதலாம்
ஆதலினுனதடியனுகுவன்நான்
போதலர்நெடுமுடிப்புண்ணியனே !
ஆண்டாய் ! உனைக்காண்பதோர்
அருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையை
விண்ணகர்மேயவனே ! 8

திருவிண்ணகரப்பனே ! மலர்கள் அணிந்த நீண்ட திருமுடியையுடைய பரிசுத்தனே ! மங்கையர்பால் காதலைப் பெருக்கிச் சிற்றின்பத்தை நுகர்வதால் பின்னையும் வரும் துன்பத்திற்குக் காரணமான கர்மத்தை நினைத்து அஞ்சி உன் திருவடிகளைச் சரணமடைகின்றேன்............ 8

சாதலும்பிறத்தலுமென்றிவற்றைக்
காதல்செய்யாதுனகழலடைந்தேன்
ஓதல்செய்நான்மறையாகி
உம்பராதல்செய்மூவுருவானவனே !
ஆண்டாய் ! உனைக்காண்பதோர்
அருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையை
விண்ணகர்மேயவனே ! 9

திருவிண்ணகரப்பனே ! அத்யயநம் செய்ய உரிய நான்கு வேதங்களையும் விபூதியாகவுடையனாய்த் தேவர்

களின் தலைவரான ப்ரஹ்ம—ருத்ர—இந்த்ரர்களைச் சரீர மாகக் கொண்டவனே! பிறப்பிலும் சாவிலும் உள்ள துன்பங்களை நினைந்து அவற்றை விரும்பாது உன் திருவடிகளையடைந்தேன்.......... 9

பூமருபொழிலணிவிண்ணகர்மேல்
காமருசீர்க்கலிகன்றிசொன்ன
பாமருதமிழிவைபாடவல்லார்
வாமனனடியிணைமருவுவரே. 10

மலர்கள் விளங்கும் சோலைகளாலே அழகுபெற்று விளங்கும் திருவிண்ணகரத்தைக் குறித்து, எல்லோரும் விரும்புதற்குரிய வைணவச் செல்வம் பொருந்திய திருமங்கைமன்னன் அருளிச்செய்த சிறந்த விருத்தங்கள் அமைந்த இப்பாசுரங்களைக் கற்று வல்லார் எம்பெருமான் திருவடிகளையடைந்து அநுபவிக்கப்பெறுவர்... 10

அடிவரவு:— வண்டு, அண்ணல், குழல், நிலவு, பார், கார், உருக்கு, காதல், சாதல், பூமரு, பொறுத்தேன்.

ஆழ்வார்திருவடிகளே சரணம்

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

திருமங்கைமன்னன் அருளிச்செய்த

## பெரிய திருமொழி, ஆறும்பத்து, இரண்டாந்திருமொழி

**அவதாரிகை:—** கீழ்த்திருமொழியில் ஆழ்வார் தமக்கு ஸம்ஸாரத்தில் உண்டான வெறுப்பைப் பலகால் விண்ணப்பித்தும் இவரை ஸம்ஸாரத்தினின்று பரமபதத்திற்கு அழைத்துச் செல்லாமையால் மிக வருந்தி "இதுகாறும் நாம் ஸம்ஸாரத்தில் பட்டதுன்பங்களையும் இனிவரப்போகும் கஷ்டங்களையும் விண்ணப்பித்தால்

திருவுள்ளமிரங்கித் தம்மைத் திருவுள்ளம் பற்றுவான்'' என்று கருதி அத்துன்பங்களை நினைத்து அஞ்சுவதாய்க் கூறித் தம்மை ஏற்றுக்கொண்டே தீரவேண்டுமென்று திருவிண்ணகரப்பன் திருவடிகளைச் சரணமடைகின்றார்.

பொறுத்தேன்புன்சொல்நெஞ்சில்பொருளின்பமென
[ விரண்டும்
இறுத்தேன்ஐம்புலன்கட்கிடனாயின வாயிலொட்டி
அறுத்தேன்ஆர்வச்செற்றமவைதம்மை மனத்தகற்றி
வெறுத்தேன் நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! 1

திருவிண்ணகரில் எந்நாளும் எழுந்தருளியுள்ள எம்பெருமானே! உன்னைத் துதித்தற்குரிய சொற்களைக் கொண்டு அற்பர்களைத் துதிக்கும் ஓரெண்ணத்தைக் கொண்டேன். ஐந்து இந்த்ரியங்களுக்கு விஷயமான பொருளையும் இன்பத்தையும் அநுபவித்துத் தீர்ந்தேன். ஓரொரு காரணத்தை முன்னிட்டுப் பிறரிடமுள்ள அன்பையும் பகையையும் வெறுத்தொழித்தேன். உன் திருவடிகளைச் சரணமடைந்தேன். 1

மறந்தேனுன்னைமுன்னம் மறந்தமதியின்மனத்தால்
இறந்தேனெத்தனையும் அதனாலிடும்பைக்குழியில்
பிறந்தேயெய்த்தொழிந்தேன் பெருமான்! திருமார்பா!
சிறந்தேன் நின்னடிக்கே திருவிண்ணகர்மேயவனே! 2

திருவிண்ணகரானே! நெடுங்காலம் உன்னை நினையாது மறந்தேன். அதில் அநுதாபமும் கொள்ளாது மிகக் கெட்டொழிந்தேன். ஆதலால் கர்ப்பத்தில் கிடந்து பிறப்பதும் அழிவதுமாயிருந்தேன். தலைவனே! பெரிய பிராட்டியைத் திருமார்பில் தரிப்பவனே! இன்று உன் திருவடிகளுக்குத் தகுதியானேன். 2

மானேய்நோக்கியர்தம் வயிற்றுக்குழியிலுழைக்கும்
ஊனேராக்கைதன்னை உதவாமையுணர்ந்துணர்ந்து
வானே! மாநிலமே! வந்துவந்தென்மனத்திருந்த
தேனே! நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! 3

திருவிண்ணகரானே! லீலாவிபூதி நித்யவிபூதி ஆகிய இரண்டுக்கும் தலைவ! மிக்க அன்புடன் என் உள்ளத்தை இடமாகக்கொண்டு தேனைப்போல் இனியனு யிருப்பவனே! மான்போன்ற விழிகளையுடைய பெண்களின் ஆபாஸமான வயிற்றிற் கிடந்துழல்கின்ற இந்த மாம்ஸ சரீரத்தால் பயனற்றமையை நன்கறிந்து உன்னைச் சரணமடைந்தேன். 3

பிறிந்தேன்பெற்றமக்கள்பெண்டிரென்றிவர்பின்னுதவா
தறிந்தேன் நீபணித்தவருளென்னும் ஒள்வாளுருவி
எறிந்தேன்ஐம்புலன்களிடர்தீர எறிந்துவந்து
செறிந்தேன் நின்னடிக்கே திருவிண்ணகர்மேயவனே! 4

திருவிண்ணகரானே! பெற்ற பிள்ளைகள் மனைவிகள் முதலிய சுற்றத்தார் நான் இறக்கும்போது உதவி செய்பவரல்லரென்று அறிந்து அவர்களை விட்டேன். நீ முன்பு அர்ஜுநனுக்கு உபதேசித்த அருளாகிய அழகிய வாளைக்கொண்டு உலக விஷயங்களால் வரும் துன்பத்தை அறவே ஒழித்தேன். பின் உன்னைச் சரணமடைந்தேன். 4

பாண்டேன்வண்டறையுங்குழலார்கள் பல்லாண்டிசைப்ப
ஆண்டார்வையமெல்லாம் அரசாகிமுன்னாண்டவரே
மாண்டாரென்றுவந்தார் அந்தோ! மனைவாழ்க்கைதன்னை
வேண்டேன் நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! 5

திருவிண்ணகரானே! பாடிக்கொண்டே தேனைப் பருகும் வண்டுகள் மொய்த்த கூந்தலையுடைய பெண்

களால் மங்களம் பாடப்பெற்று உலகமுழுதையும் ஆண்ட அரசர்கள் அனைவரும் "இறந்தனர்" என்ற சொல்லுக்கு இலக்காயினர். ஐயோ! ஸம்ஸார வாழ்க்கையைச் சிறிதும் விரும்பாது உன் திருவடிகளையடைந்தேன். 5

கல்லாவைம்புலன்களவை கண்டவாறுசெய்யகில்லேன்
மல்லா! மல்லமருள்மல்லர்மாள மல்லடர்த்த
மல்லா! மல்லலம்சீர் மதிள்நீரிலங்கையழித்த
வில்லா! நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! 6

திருவிண்ணகரானே! நல்வழிநடக்க உடன்படாத ஐந்து இந்திரியங்களும் போகும்வழியில் நான் போகப் பொறுக்கமாட்டேன். மிக்க வலிமையுடையவனே! மற்போரில் சாணூராதியர் அழிந்துபோம்படி அவர்களது வீரத்தை அடக்கிய மஹாவீரனே! வளம் நிறைந்த அழகிய சிறந்த மதிளாலும் கடல்நீராலும் சூழப்பெற்ற இலங்கையை நாசம்செய்த வில்லையுடையவனே! உன்னைச் சரணமடைந்தேன். 6

வேறாயானிரந்தேன் வெகுளாதுமனக்கொளெந்தாய்!
ஆறுவெந்நரகத்து அடியேனையிடக்கருதிக்
கூறுவைவர்வந்து குமைக்கக்குடிவிட்டவரைத்
தேறாதுன்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! 7

திருவிண்ணகரானே! என் ஸ்வாமியே! இதுகாறும் வேறு விஷயங்களில் மனத்தைச் செலுத்தியிருந்த அடியேன் இப்பொழுது நிலைமை மாறி உன்னை யாசிக்க வந்துள்ளேன். அடியேன்மீது சினங்கொள்ளாது திருவுள்ளம் பற்றவேண்டும். அதாவது — ஐந்து இந்திரியங்களும் அழிவற்ற மிகக் கொடிய நரகத்தில் என்னை அழுத்தக் கருதி என்னைப் பங்கிட்டுக்கொண்டு நெருக்க அவ்விந்திரியங்களை நம்பாமல் உன்னைச் சரணமடைந்தேன். 7

தீவாய்வல்வினையார் உடன்நின்று சிறந்தவர்போல்
மேவாவெந்நரகத்து இடவுற்றுவிரைந்துவந்தார்
மூவாவானவர்தம்முதல்வா! மதிகோள்விடுத்த
தேவா! நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! 8

திருவிண்ணகரானே! மிகக்கொடிய பலனை அளிக்க வல்ல பாபங்கள் சுற்றத்தாரைப்போல் என்னைப் பிரியாமல் வந்துநின்று எனக்குத் தகாத நரகத்தில் தள்ள விரைவுடையனவாயிருக்கின்றன. முதுமையற்ற நித்ய ஸூரிகளின் தலைவ! சந்திரனுடைய க்ஷயநோயைப் போக்கியவனே! உன்னைச் சரணமடைந்தேன். 8

போதார்தாமரையாள் புலவிக்குலவானவர்தம்
கோதா! கோதில்செங்கோல் குடைமன்னரிடைநடந்த
தூதா! தூமொழியாய்! சுடர்போலென்மனத்திருந்த
வேதா! நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! 9

திருவிண்ணகரானே! பெரிய பிராட்டியாரும் பூமிப் பிராட்டியாரும் நித்யஸூரிகளும் விரும்பிப் போற்றும் பெருமையனே! தடையின்றிச் செங்கோல் செலுத்துகின்ற, குடையையுடைய துரியோதனாதியரிடம் தூது சென்றவனே! சென்று இனிய நல்வார்த்தையை அருளிச்செய்தவனே! என் உள்ளத்துள் விளங்கிக் கொண்டிருப்பவனே! வேதங்களால் போற்றப்பெற்றவனே! உன்னைச் சரணமடைந்தேன். 9

தேனார்பூம்புறவில் திருவிண்ணகர்மேயவனை
வானாரும்மதிள்சூழ் வயல்மங்கையர்கோன் மருவார்
ஊனார்வேற்கலியன் ஒலிசெய்தமிழ்மாலைவல்லார்
கோனாய், வானவர்தம் கொடிமாநகர்கூடுவரே. 10

தேன் நிறைந்த பூஞ்சோலைகளையுடைய திருவிண்ணகரில் எழுந்தருளியிருக்கும் ஒப்பிலியப்பனைக் குறித்து

வானமளாவிய மதிள்களாலும் வயல்களாலும் சூழப் பெற்ற திருமங்கைநகர்க்குத் தலைவனும் பகைவரின் உடலுள்புகும் வேலையுடையவனுமான கலியன் அருளிய இத்தமிழ்மாலையைக் கற்பவர் நித்யஸூரிகள் உறைகின்ற கொடிகளையுடைய ஸ்ரீவைகுண்டத்தைச் சேர்வர். 10

அடிவரவு.— பொறுத்தேன், மறந்தேன், மானேய், பிறிந்தேன், மாண்டேன், கல்லா, வேறு, தீவாய், போதார், தேனார், துறப்பேன்.

ஆழ்வார்திருவடிகளே சரணம்

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

### திருமங்கைமன்னன் அருளிச்செய்த

## பெரிய திருமொழி, ஆறும்பத்து, மூன்றுந்திருமொழி

அவதாரிகை:— கீழ்த்திருமொழிகளில் ஆழ்வார் ஸம்ஸார தோஷங்களை விரிவாய் விண்ணப்பம்செய்து ஸம்ஸாரத்தை நீக்குமாறு வேண்டிச் சரணம் புகுந்தும் திருவிண்ணகரப்பன் தம்மை இன்னும் பரீட்சிக்கத் திருவுள்ளங்கொண்டிருப்பதாய்க் கருதிப் பின்னும் அவன் திருவடிவாரத்தில் தாம் அபேக்ஷித்த புருஷார்த்தம் இன்னது என்பதையும், பரமபதம் சென்று அவன் தாளிணைக் கீழ் வாழ்ச்சியில் தமக்குப் பிறந்துள்ள பேரவாவையும் விரிவாய் விண்ணப்பம் செய்கிறார் இத் திருமொழியில் :—

**துறப்பேனல்லேன் இன்பம், துறவாதுநின்னுருவம்**
**மறப்பேனல்லேன் என்றும்மறவாதுயானுலகில்**
**பிறப்பேனாகவெண்ணேன் பிறவாமைபெற்றதுநின்**
**திறத்தேனாதன்மையால் திருவிண்ணகரானே !** 1

திருவிண்ணகரப்பனே ! உன்னை அநுபவிப்பதால் உண்டாகும் பேரின்பத்தை விடமாட்டேன். உன் திருமேனியழகை ஒருநாளும் மறக்கமாட்டேன். அவ்வாறு இருத்தலால், இனி ஸம்ஸாரத்தில் பிறப்பதாக எண்ண மாட்டேன். உனக்கு அடிமைப்பட்டேனாதலின் இனி ஸம்ஸாரபந்தம் நீங்கப்பெற்றேன். 1

**துறந்தேனார்வச்செற்றச்சுற்றம் துறந்தமையால்**
**சிறந்தேன் நின்னடிக்கேயடிமை, திருமாலே !**
**அறந்தானாய்த்திரிவாய் ! உன்னையென்மனத்தகத்தே**
**திறம்பாமற்கொண்டேன் திருவிண்ணகரானே !** 2

திருவிண்ணகரானே! உலக விஷயங்களில் ஆசை வைத்தல், அவை கைகூடாவிட்டால் வரும் கோபம், தேஹத்தைப்பற்றி வரும் பந்துக்களிடம் பற்று இவற்றைக் கைவிட்டேன். அதனால் உன் திருவடிகளுக்குக் கைங்கர்யம் செய்ய உரியனானேன். தருமமே வடிவு கொண்டாற்போன்ற திருமாலே! உன்னை என் நெஞ்சிற்குள் ஸ்திரப்படுத்திக்கொண்டேன். 2

**மானேய்நோக்குநல்லார் மதிபோல்முகத்துலவும்**
**ஊனேய்கண்வாளிக்கு உடைந்தோட்டந்துஉன்னடைந்தேன்**
**கோனே ! குறுங்குடியுட்குழகா ! திருநறையூர்த்**
**தேனே ! வருபுனல்சூழ் திருவிண்ணகரானே !** 3

திருவிண்ணகரப்பனே ! எல்லாருக்கும் சேஷியாய் இருப்பவனே! திருக்குறுங்குடியில் எளியனாய் எழுந்தருளியிருப்பவனே ! திருநறையூரில் பரம போக்யமாயிருப்பவனே ! மான்போன்ற பார்வையுடைய மாதர்களின் சந்திரன்போன்ற முகத்திலுள்ள கண்களாகிய அம்புக்கு அஞ்சி ஓடிவந்து உன்னைச் சரணமடைந்தேன். 3

சாந்தேந்துமென்முலையார் தடந்தோள்புணரின்பவெள்ளத்
தாழ்ந்தேன் அருநரகத்தழுந்தும் பயன்படைத்தேன்
போந்தேன் புண்ணியனே! உன்னையெய்தியென் தீவினைகள்
தீர்ந்தேன் நின்னடைந்தேன் திருவிண்ணகரானே! 4

திருவிண்ணகரானே! அடியேனுடைய புண்யமே வடிவெடுத்தவனே! முன்னாள் சந்தனமணிந்த மெல்லிய கொங்கைகளையுடைய பெண்களின் பருத்த தோள்களை அணைதலாகிய இன்பக்கடலுள் அழுந்திக் கிடந்தேன். அதனால் கொடிய நரகத்தில் அழுந்துவதாகிய பலனைப் பெற்றேன். இன்று உன்னை அணுகப்பெற்றேன். அதனால் என் கொடிய பாபங்கள் நீங்கப்பெற்றேன். உன் திருவடிகளையடைந்தேன். 4

மற்றோர்தெய்வமெண்ணேன் உன்னையென்மனத்து வைத்துப்
பெற்றேன் பெற்றதுவும் பிறவாமையெம்பெருமான்!
வற்றாநீள்கடல்சூழ் இலங்கையிராவணனைச்
செற்றாய்! கொற்றவனே! திருவிண்ணகரானே! 5

திருவிண்ணகரப்பனே! வற்றாத பெரிய கடல் சூழ்ந்த இலங்கையிலிருந்த இராவணனைக் கொன்று வெற்றி கொண்டவனே! உன்னையன்றி வேறொரு தெய்வத்தை நெஞ்சாலும் யான் நினைப்பதில்லை. உன்னையே நெஞ்சிற் கொண்டு சிறந்த பயன் பெற்றேன். அஃது என்ன பயன் எனில், இனி ஸம்ஸாரத்திற் பிறவாமையே. 5

மையொண்கருங்கடலும் நிலனும்மணிவரையும்
செய்யசுடரிரண்டும் இவையாயநின்னை நெஞ்சில்
உய்யும்வகையுணர்ந்தேன் உண்மையாலினியாதும்மற்றோர்
தெய்வம்பிறிதறியேன் திருவிண்ணகரானே! 6

திருவிண்ணகரானே! மைபோல் அழகிய கருங்கடலும், அக்கடல் சூழ்ந்த இவ்வுலகமும், உலகிலுள்ள

மலைகளும், சந்திரசூரியரென்னும் இருசுடர்களும் ஆகிய இப்பொருள்களிலுள்ளும் உறையும் உன்னை யான் உஜ்ஜீவிக்கும்படி நெஞ்சினால் உண்மையாக உணர்ந்தேன். இனி உன்னையன்றி வேறொரு தெய்வத்தையும் நினைக்க மாட்டேன். 6

வேறேகூறுவதுண்டு அடியேன்விரித்துரைக்கு
மாறே நீபணியாதடை நின்திருமனத்துக்
கூறேன்நெஞ்சுதன்னால் குணங்கொண்டு மற்றோர்தெய்வம்
தேறேன்உன்னையல்லால் திருவிண்ணகரானே! 7

திருவிண்ணகரப்பனே! அடியேன் விலக்ஷணமாக விண்ணப்பம்செய்வது ஒன்று உண்டு. அதாவது:— அடியேன் மிக விரிவாய்க் கேட்கும்படி கூறாமல் உன் திருவுள்ளத்தில் ஸாரமாய்ப் பட்டதை அருளிச்செய்ய வேண்டும். உன்னையன்றி மற்றொரு தெய்வத்தைக் குண முடையதாய்க் கூறமாட்டேன். உன்னையன்றி மற்றொரு தெய்வம் இருப்பதாய்க் கருதமாட்டேன். 7

முளிந்தீந்தவெங்கடத்து மூரிப்பெருங்களிற்றால்
விளிந்தீந்தமாமரம்போல் வீழ்ந்தாரை நினையாதே
அளிந்தோர்ந்தசிந்தை நின்பாலடியேற்கு வானுலகம்
தெளிந்தேயென்றெய்துவது? திருவிண்ணகரானே! 8

திருவிண்ணகரானே! காய்ந்து தீய்ந்த பாலைவனத்தில் வலிய ஒரு யானையால் தள்ளப்பட்டு அழிந்துபோன பெரிய மரங்களைப்போல் இவ்வுலகில் எண்ணற்றவர் தங்கள் கருமத்தால் இறந்துபோகின்றனர். அவர்களை நினைந்து வருத்தமடையாமல் பக்குவ நிலையடைந்து உன் பக்கல் நெஞ்சைச் செலுத்தும் ஆராய்ச்சியுள்ள யான் ஸம்ஸாரத் துன்பங்களால் வரும் கலக்கம் நீங்கித் தெளிந்த நிலையில் பரமபதத்தை அடையும் காலம் என்றைக்கோ, அந்நாளை அருளிச்செய்யவேண்டும். 8

சொல்லாய்திருமார்வா! உனக்காகித்தொண்டுபட்ட
நல்லேனை வினைகள் நலியாமை நம்புநம்பீ!
மல்லா! குடமாடி! மதுசூதனே! உலகிற்
செல்லா நல்லிசையாய்! திருவிண்ணகரானே! 9

திருவிண்ணகரப்பனே! பெரிய பிராட்டியைத் தனது திருமார்பில் கொண்டவனே! குடக்கூத்தாடியவனே! பரிபூர்ணனே! மதுவைக் கொன்றவனே! உலகில் விலக்ஷணமான புகழையுடையவனே! உன் திருவாயைத் திறந்து ஒரு சொல்மட்டும் கூறினாலும் போதும். உனக்கே அடிமைப்பட்டிருந்த செயலையுடைய அடியேனைக் கருமங்கள் வந்து நெருக்காதபடி அருள்புரியவேணும். 9

குடக்கூத்து :— தலையில் குடங்களை வரிசையாக அடுக்கி வைத்துக்கொண்டு அவை அசையாமல் தான் ஆடுவது.

தாரார்மலர்க்கமலத் தடஞ்சூழ்ந்ததண்புறவில்
சீரார்நெடுமறுகில் திருவிண்ணகரானை
காரார்புயல்தடக்கைக் கலியனொலிமாலை
ஆராரிவைவல்லார் அவர்க்குஅல்லல்நில்லாவே. 10

மிக்க பூக்களையுடைய தாமரைக் குளங்கள் சூழ்ந்த குளிர்ந்த தோட்டங்களையுடைய செல்வம் நிறைந்த பெரிய தெருக்களையுடைய திருவிண்ணகருக்கு நாயகனான எம் பெருமானைக் காளமேகம்போன்ற வண்மையையுடைய திருமங்கைமன்னன் அருளிச்செய்த இச்சொன்மாலைகளை ஓதவல்லாரிடத்தும் பாவங்கள் நிற்கமாட்டா. 10

அடிவரவு :—துறப்பேன், துற, மானேய், சாந்து, மற்றோர், மை, வேறே, முளிந்து, சொல்லாய், தாரார்.

ஆழ்வார்திருவடிகளே சரணம்
சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

நம்மாழ்வார் அருளிச்செய்த

## திருவாய்மொழி ஆறும்பத்து, மூன்றுந்திருவாய்மொழி

**அவதாரிகை :—** கீழ்த்திருவாய்மொழியில் ஆழ்வாருக்கு ப்ரணய கோபம் விஞ்சி இனி எம்பெருமானேடு கூடுவ தில்லையென்று வெறுத்திருந்தார். அடியார்கள் விரும்பும் போது அவர்களைத் தான் புறக்கணிப்பதும், அவர்கள் தன்னைப் புறக்கணிக்கும்போது தான் அவர்களை விரும்பு வதும் எம்பெருமானுடைய லீலையாதலின் அப்படி வெறுத்திருந்த ஆழ்வாரை எப்படியாவது தன்மேல் விழச் செய்யவேண்டுமென்று திருவுள்ளங்கொண்டு திரு விண்ணகரில் அதியற்புதமாய் ஸேவை ஸாதிக்கும் அழகை ஆழ்வார்க்குக் காட்டிக் கொடுத்தான் எம் பெருமான். அவ்வழகைக் கண்ட ஆழ்வார் ப்ரணய கோபம் தீர்ந்து திருவிண்ணகரப்பனை விடமாட்டாமல் மேல்விழுந்து அநுபவித்து "இனி இவன் முகத்தில் விழிப்பதில்லை" யென்று வெறுத்திருந்த தமது உறுதியைக் குலைத்து மயக்கிய திருவிண்ணகரப்பன் ஸாதாரணமானவனல்லன். "சேராத பொருளையெல்லாம் சேர்க்கும் சதுரன்" என்று நிச்சயித்து இவ்வெம்பெருமா னுடைய அதியற்புதமான பெருமைகளைப் பேசுகிறுர் இத்திருவாய்மொழியில் :—

**நல்குரவும்செல்வும் நரகும்சுவர்க்கமுமாய்**
**வெல்பகையும்நட்பும் விடமும்அமுதமுமாய்ப்**
**பல்வகையும்பரந்த பெருமானென்னையாள்வானைச்**
**செல்வம்மல்குகுடித் திருவிண்ணகர்க்கண்டேனே. 1**

வறுமையும் செல்வமும், நரகமும் ஸ்வர்க்கமும், பகை வரை வெல்லும் பகைமையும் நட்பும், கொல்லும் விஷ மும் பிழைப்பிக்கும் அமுதமும் ஆகிய பல்வகைப் பொருள் கட்கும் அந்தர்யாமியாய், ஸர்வேசுவரனுக இருந்தும்

என்னேடு கூடியருளிய எம்பெருமானைப் பகவத் கைங்கர்யமாகிய செல்வம் நிறைந்த பெரியோர்கள் நிரம்பிய திருவிண்ணகரிலே கண்டுகொண்டேன். 1

கண்டவின்பம்துன்பம் கலக்கங்களும்தேற்றமுமாய்
தண்டமும்தண்மையும் தழலும்நிழலுமாய்
கண்டுகொள்தற்கரிய பெருமானென்னையாள்வானூர்
தெண்திரைப்புனல்சூழ் திருவிண்ணகர் நன்னகரே. 2

உலகில் காணப்படும் ஸுகதுக்கங்களும், துக்கத்தால் வரும் மனக்கலக்கங்களும் ஸுகத்தால் வரும் மனத் தெளிவும், அநுக்ரஹமும் நிக்ரஹமும், வெப்பமும குளிர்ச்சியும் ஆகிய ஒன்றுக்கொன்று விரோதமுள்ள வஸ்துக்களுக்கும் அந்தர்யாமியாய், ஸேவிக்க அரியனு யிருந்த ஸர்வேசுவரனை நான் கண்ணாரக்கண்டு அடிமை செய்யும்படி அவன் புகுந்து வாழ்ந்தருளும் திவ்ய தேசம் தெளிந்த அலைகளுடைய நீராலே சூழப்பட்ட திருவிண் ணகரமென்னும் சிறந்த நகரமே. 2

நகரமும்நாடுகளும் ஞானமும்மூடமுமாய்
நிகரில்சூழ்சுடராயிருளாய் நிலனாய்விசும்பாய்ச்
சிகரமாடங்கள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்
புகர்கொள்கீர்த்தியல்லாலில்லை யாவர்க்கும்புண்ணியமே. 3

பெரிய நகரங்களும் சிறிய கிராமங்களும், அறிவும் அறிவின்மையும், ஒப்பற்ற பரந்த ப்ரகாசமும் இருளும், பூமியும் ஆகாயமுமாகிய அனைத்தையும் அடக்கியாள் கின்ற தலைவனுயிருந்த, சிகரங்களையுடைய மாடங்கள் சூழ்ந்த திருவிண்ணகரில் எழுந்தருளியுள்ள எம்பெருமா னது பெருமை வாய்ந்த கருணையைத் தவிர எல்லாரை யும் உய்விக்கும் புண்யம் வேறில்லை. 3

**புண்ணியம்பாவம் புணர்ச்சிபிரிவென்றிவையாய்**
**எண்ணமாய்மறப்பாய் உண்மையாயின்மையாயல்லனுய்த்**
**திண்ணமாடங்கள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்**
**கண்ணனின்னருளே கண்டுகொண்மின்கள்கைதவமே. 4**

புண்யம் - பாபம், அவற்ருல் வரும் கலவி - பிரிவு, நினைப்பு - மறப்பு, உண்மை - இல்லாமை ஆகிய அனைத்துக்கும் அந்தர்யாமியாய் எங்கும் பரவியிருந்தும் அப்பொருள்களில் உள்ள தோஷங்கள் தட்டப்பெருதவனுய், திடமான மாடங்கள் சூழ்ந்த திருவிண்ணகரிலே வாழ்ந்தருள்கின்ற எம்பெருமானுகிய கண்ணனது அருளாலே உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் படைக்கப்பட்டன வென்பதை உண்மையாக இங்கு நேரிற் காணலாம். 4

**கைதவம்செம்மை கருமைவெளுமையுமாய்**
**மெய்பொய்இளமைமுதுமை புதுமைபழமையுமாய்ச்**
**செய்ததிண்மதில்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்**
**பெய்தகாவுகண்டீர் பெருந்தேவுடைமூவுலகே. 5**

கபடம் - நேர்மை, கருமை - வெண்மை, பொய் - மெய், இளமை - முதுமை, புதுமை - பழமை ஆகிய ஒன்றுக்கொன்று முரண்பட்ட தர்மவடிவனுய், திடமாகச் செய்யப்பட்ட மதிள்கள் சூழ்ந்த திருவிண்ணகருக்குத் தலைவனுன எம்பெருமான் படைத்த விளையாட்டுச் சோலைகளாய் ப்ரஹ்மா முதலிய தேவர்களையுடைய மூவுலகங்களும். 5

**மூவுலகங்களுமாயல்லனுய் உகப்பாய்முனிவாய்**
**பூவில்வாழ்மகளாய்த்தவ்வையாய் புகழாய்ப்பழியாய்த்**
**தேவர்மேவித்தொழும் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்**
**பாவியேன்மனத்தே உறைகின்றபரஞ்சுடரே. 6**

நித்யஸூரிகள் வந்து தொழுமிடமாகிய திருவிண்ணகரெம்பெருமான், எல்லாவுலகங்கள், அவற்றிலுள்ள

மற்ற பதார்த்தங்கள், அன்பு - கோபம், செங்கமலச் செல்வியான மஹாலக்ஷ்மி - அமங்கள தேவதை, புகழ் - பழி ஆகிய இவ்வனைத்துக்கும் அந்தர்யாமியாய், சிறந்தனவும் இழிந்தனவுமான பொருள்களில் உறைந்தும் அவற்றால் ஒரு தோஷமும் தட்டாதவனாய் இருக்கின்றானென்பதைப் பாவியான என் மனத்துப் பொருந்திநின்று அதனால் ஒரு குற்றமும் தட்டாமல் எல்லையற்ற ப்ரகாசமுடையனாயிருப்பதால் காணலாம். 6

**பரஞ்சுடருடம்பாய் அழுக்குப்பதித்தவுடம்பாய்க் [ணோர்**
**கரந்தும்தோன்றியும்நின்றும் கைதவங்கள்செய்தும்விண்**
**சிரங்களால்வணங்கும் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்**
**வரங்கொள்பாதமல்லாலில்லை யாவர்க்கும்வன்சரணே. 7**

எல்லையற்ற தேஜோமயமான திவ்ய வடிவத்தையுடையனாய், இழிவான தன்மைகளையுடைய எல்லாவுலகங்களையும் தனக்குத் திருமேனியாகவுடையனாய், பிறரால் அறியப்படாதவனாய், அடியார்களைக் காக்கப் பல்வேறு அவதாரங்களைச் செய்தும் அடியார்களுடன் கலந்து பரிமாறியும் ப்ரதிகூலர்க்கு அறிய முடியாமல் கபடங்களைச் செய்தும் நிற்பவனாய், பிரமன் முதலிய ஸகல தேவர்களும் தம் தலையால் வணங்கும் திருவிண்ணகருக்கு அப்பனாயுள்ள எம்பெருமானுடைய திருவடிகளையன்றி வேறு புகல் ஒருவர்க்கும் இல்லை. 7

**வன்சரண்சுரர்க்காய் அசுரர்க்குவெங்கூற்றமுமாய்த்**
**தன்சரண் நிழற்கீழ் உலகம்வைத்தும்வையாதும்**
**தென்சரண்திசைக்குத் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்**
**என்சரணென்கண்ணன் என்னையாளுடையென்னப்பனே. 8**

தெய்வத்தன்மையுள்ள அடியார்களைத் தன் திருவடி நிழலில் வைத்து அவ்வடியார்களுக்குத் திடமான

அடைக்கலமாகி, அடியார்களுக்கு எதிரிகளான அசுரத் தன்மையர்களைத் தன் திருவடிகளில் சேரவொட்டாது விலக்கி அவர்களுக்கு மிகப் பயங்கரனான யமனாயிருந்த எம்பெருமான் தென்திசையிலுள்ளோர்க்குப் புகலாவதற்காகத் திருவிண்ணகரிலே புகுந்து எனக்குப் பயனாய் எனக்குக் கண்போன்றவனாய் என்னைக்கொண்டு எல்லா அடிமைகளையும் கொண்டருளி எனக்கு ஸ்வாமியானான். 8

என்னப்பனெனக்காயிகுளாய் என்னைப்பெற்றவளாய்ப்
பொன்னப்பன்மணியப்பன் முத்தப்பனென்னப்பனுமாய்
மின்னப்பொன்மதில்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தவப்பன்
தன்னொப்பாரில்லப்பன் தந்தனன் தன தாள் நிழலே. 9

எனக்குத் தந்தையும் வளர்த்த தாயும் பெற்ற தாயுமாகிப் பொன்போன்ற தன்னழகைக் காட்டியவனாய், அதிலும் மிக்க ஒளியுடைய இரத்தினம் போன்ற தன் சுடரைத் தோற்றுவிப்பவனாய், நீர்மையாலும் குளிர்ச்சியாலும் அதினும் சிறந்த முத்துப்போன்ற தன் தன்மையைக் காட்டுமவனாய், இப்படிப் பலவனைக் காட்சி தந்து எனக்குப் பேருதவி புரிந்தவனாய், ஒளிவிடும்படி பொன் மதில்களால் சூழப்பட்ட திருவிண்ணகரிலே எழுந்தருளியிருந்த தன்னொப்பாரில்லப்பன் என் தாபமெல்லாம் தீரும்படி மிகக் குளிர்ந்த, இறந்தவரையும் பிழைப்பிக்க வல்ல தன் திருவடிநிழலை எனக்குத் தந்தருளினான். 9

நிழல்வெய்யில்சிறுமைபெருமை குறுமைநெடுமையுமாய்ச்
சுழல்வன நிற்பன மற்றுமாயவையல்லனுமாய்
மழலைவாய்வண்டுவாழ் திருவிண்ணகர்மன்னுபிரான்
கழல்களன்றி மற்றோர்களைகணிலம்காண்மின்களே. 10

வெப்பத்தைத் தணிக்கும் நிழலும் வெப்பத்தைப் பிறப்பிக்கும் வெய்யிலும், சிறுமைக்கு எல்லையாகிய

அணுத்வமும் பெருமைக்கு எல்லையாகிய மஹத்துவமும், இடையளவாகிய குறுமையும் நெடுமையும், தாவரமும் சங்கமமும் இவை முதலிய எல்லாப் பொருள்களுமாகி அவற்றின் தோஷம் ஒன்றும் தட்டாதவனாய், வண்டுகள் பருவத்தின் இளமையாலே இனிமையாக இசைபாடுகின்ற திருவிண்ணகரில் "இது ஆழ்வாரோடு ஸம்ச்லேஷிக்கப்பெற்ற இடமாகையால் இவ்விடத்தை இனி உயிருள்ளளவும் விடேன்" என்று எழுந்தருளியிருந்த எம்பெருமானுடைய திருவடிகளையன்றி வேறொரு கதியில்லையென்னுமிடத்தை எல்லாரும் கண்கூடாகக் காணலாம்.

காண்மின்களுலகீர்! என்று கண்முகப்பே நிமிர்ந்த
தாளிணையன் தன்னைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன
ஆணையாயிரத்துத் திருவிண்ணகர்ப்பத்தும்வல்லார்
கோணையின்றிவிண்ணோர்க்கும் என்றுமாவர்குரவர்களே. 11

திருக்குருகூரிலவதரித்த சடகோபன் அருளிச்செய்த ஆயிரத்துள் "உலகத்தீரே! இந்த வேடிக்கையைப் பாருங்கள்" என்று சொல்லி ஒரு வேடிக்கை காட்டுபவன் போல் கண்ணெதிரே திருவடிகளை வளர்த்தியருளிய திருவிண்ணகரப்பனது உலகத்தை நியமிக்கும் தன்மையை விளக்கும் இப்பத்துப் பாசுரங்களையும் கற்றுவல்லார் நித்யஸூரிகளுக்கும் எப்போதும் ஐயமின்றிக் கௌரவிக்கத் தக்கவராவர். 11

ஆழ்வார்திருவடிகளே சரணம்

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

திருமங்கைமன்னன் அருளிச்செய்த

## பெரிய திருமொழி 10ம் பத்து. 1ம் திருமொழி. 8வது பாசுரம்

பத்தராவியைப் பான்மதியை அணித்
தொத்தை மாலிருஞ்சோலைத் தொழுதுபோய்
முத்தினைமணியை மணிமாணிக்க
வித்தினைச் சென்றுவிண்ணகர்க்காண்டுமே.

அடியார்க்கு உயிராய், களங்கமற்ற சந்திரனைப் போன்று அழகிய திருமேனியுடையனாய், ஆபரணங்களின் வரிசைபோல உள்ளங் கவர்பவனாய் விளங்கும் எம்பெருமானை முன்பு திருமாலிருஞ்சோலையில் ஸேவித்து முத்துப்போல் குளிர்ந்தவனும் நீலரத்தினம்போல் துயரத்தைப்போக்கவல்ல திருமேனியுடையனும், விலையுயர்ந்த மாணிக்கம்போன்று கண்களைக் கவர்பவனும், ஸர்வ காரணமுமான ஸர்வேசுவரனை இன்று திருவிண்ணகரிலே போய் ஸேவிப்போமாக.

---

திருமங்கைமன்னன் அருளிச்செய்த

## திருநெடுந்தாண்டகம் 29-வது பாசுரம்

அன்றாயர்குலமகளுக்கரையன்தன்னை
அலைகடலைக்கடைந்தடைத்தவம்மான்தன்னை
குன்றாதவலியரக்கர்கோனைமாளக்
கொடுஞ்சிலைவாய்ச்சரந்துரந்துகுலங்களைந்து
வென்றானைக் குன்றெடுத்ததோளினானை
விரிதிரைநீர்விண்ணகரம்மருவிநாளும்
நின்றானைத் தண்குடந்தைக்கிடந்தமாலை
நெடியானையடிநாயேன்நினைந்திட்டேனே.

முன்பு இடைக்குலத்துத்திருவவதரித்த நப்பின்னைப் பிராட்டிக்கு மணாளனாய் அலைவீசும் கடலைக் கடைந்து பிறகு இராமாவதாரத்தில் திருவணை கட்டியவனாய், எல்லோர்க்கும் ஸ்வாமியாய், குறையாத வலிமையுடையனும் அரக்கர்களுக்குத் தலைவனுமான இராவணன் ஒழியும்படி கொடிய வில்லில் அம்பைத் தொடுத்து அரக்கர் குலத்தையே வேரறும்படி ஒழித்தவனாய், கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்த திருத்தோளையுடையனாய், அகன்ற அலைகளையுடைய நீர் நிறைந்த **திருவிண்ணகரில்** எப்போதும் பொருந்தி நிற்பவனாய், சிரமத்தைப் போக்கும் திருக்குடந்தையில் திருக்கண் வளர்ந்தருளி அடியார்களிடம் தீராமயக்கையுடையனாயிருக்கிற எம்பெருமானை அடிமையும் நாய்போன்றவனுமான அடியேன் உள்ளத்துக் கொண்டேன்.

---

### திருமங்கைமன்னன் அருளிச்செய்த
## சிறிய திருமடல்

**காரார் மணிநிறக் கண்ணனூர் விண்ணகரம்**

நீலமணிவண்ணனான கண்ணன் எழுந்தருளியிருக்கும் **திருவிண்ணகரம்.**

---

### திருமங்கைமன்னன் அருளிச்செய்த
## பெரிய திருமடல்

அர்ச்சாவதாரங்களில் ஈடுபடும்போது முதலில் திருவிண்ணகரப்பனை அநுபவித்துப் பிறகு மற்ற எம்பெருமான்களை அநுபவிக்கிறார் :—

...... **தாமரைமேல்**

**மின்னிடையாள் நாயகனை விண்ணகருள் பொன்மலையை**

தாமரைப்பூவின் மீது வீற்றிருப்பவளும் மின்போன்ற இடையுள்ளவளுமான பெரிய பிராட்டிக்கு மணாளனாய்த **திருவிண்ணகரில்** பொன்னாலாகிய மலைபோன்று உள்ளங் கவரவல்ல திருமேனியையுடைய திருவிண்ணகரப்பனை.

---